# இஸ்லாமிய அடிப்படைகளுக்கான

# ஓர் வழிகாட்டல்

## கேள்வி பதில்


*அணிந்துரை வழங்கியவர்*
*கௌரவத்திற்குரிய அஷ் ஷேஹ்*
**அப்துல் அஸீஸ் பின் அப்துல்லாஹ் பின் முஹம்மத் ஆலுஷ் ஷைஹ்**
*சவூதி அரேபிய தலைமை முப்தி, மூத்த அறிஞர்கள் பேரவையின் தலைவர்*

*வாசித்து, அணிந்துரை அளித்தவர்*
*கௌரவத்திற்குரிய அறிவு மேதை அஷ் ஷேஹ்*
**ஸாலிஹ் பின் பவ்ஸான் அல் பவ்ஸான்**
*மூத்த அறிஞர்கள் பேரவையின் உறுப்பினர்*

*தொகுத்து வழங்கியவர்*
**கலாநிதி உமர் பின் அப்துர் ரஹ்மான் பின் முஹம்மத் அல் உமர்**
*ஆசிரியர், நீதிக்கான உயர் சட்டக் கலாசாலை*

| | |
|---|---|
| **நூலாக்கம்** | *கலாநிதி உமர் பின் அப்துர் ரஹ்மான் பின் முஹம்மத் அல் உமர்* |
| **அணிந்துரை** | *அப்துல் அஸீஸ் பின் அப்துல்லாஹ் பின் முஹம்மத் ஆலுஷ் ஷைஹ்*<br>*ஸாலிஹ் பின் பவ்ஸான் அல் பவ்ஸான்* |
| **தமிழில்** | *J. ஹிஸ்புல்லாஹ் அன்வாரி* |
| **மேற்பார்வை** | *M.A. நயீமுல்லாஹ் தப்லீகீ Phd* |

# பொருளடக்கம்

## சவூதி தலைமை முப்தியின் அணிந்துரை

**அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பிக்கிறேன்.**

**இப் பிரபஞ்சத்தின் இரட்சகனான அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும் உரித்தாகட்டும். சாந்தியும், சமாதானமும் எங்கள் தீர்க்கதரிசியாகிய முஹம்மத் ﷺ அவர்களுக்கும், அவரின் குடும்பத்தார், தோழர்கள் அனைவர் மீதும் உண்டாகட்டும்.**

**கலாநிதி உமர் பின் அப்துர் ரஹ்மான் அல்உமர் அவர்கள் எழுதிய "இஸ்லாமிய அடிப்படைகளுக்கான ஓர் வழிகாட்டல்" என்ற நூலை நான் வாசிக்கக் கேட்டேன். இதன் அளவு சிறிதாக இருப்பினும், ஏகத்துவம், அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாத்தினரின் கொள்கைகள், வுழு, தொழுகை, ஸகாத், நோன்பு, ஹஜ் போன்ற கடமைகளின் சட்டங்கள் என சகலதையும் சுருக்கமாக தன்னகத்தே கொண்டிருக்கின்றது.**

**வாசிப்பவர்கள் எளிதில் விளங்கும் வகையில் கேள்வி-பதில் அடிப்படையில் இப் புத்தகம் தொகுக்கப்பட்டுள்ளதானது மிகவும் பயனளிக்கக் கூடிய ஒன்றாக இருக்கின்றது. அறபு மொழி அல்லாத பிற மொழிகளைப் பேசுவோரும் இப் புத்தகத்தைக் கொண்டு பயன்பெற வேண்டுமென்ற வகையில், இது பல மொழிகளுக்கு மொழியாக்கம் செய்யப்படுதல் மிகவும் சிறந்த ஒன்றாக இருக்கின்றது.**

**எங்கள் தூதர் முஹம்மத் ﷺ அவர்களுக்கு அல்லாஹ்வின் சாந்தியும், சமாதானமும் உண்டாகட்டும். அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு.**

சவூதி அரேபிய தலைமை முப்தி
மூத்த அறிஞர்கள் பேரவையின் தலைவர்,
இஸ்லாமிய அறிவியல் ஆராய்ச்சி மற்றும் இஸ்லாமிய தீர்ப்புகள் அமைப்பின் தலைவர்,
**அப்துல் அஸீஸ் பின் அப்துல்லாஹ் பின் முஹம்மத் ஆலுஷ் ஷைஹ்.**

## கௌரவத்திற்குரிய கலாநிதி. அஷ்ஷைய்ஹ் ஸாலிஹ் பின் பவ்ஸான் அல்பவ்ஸான் அவர்களின் அணிந்துரை

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பிக்கிறேன்.

அனைத்துப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே உரித்தாகட்டும். அஷ்ஷெய்ஹ் கலாநிதி உமர் பின் அப்துர் ரஹ்மான் அல் உமர் அவர்கள் எழுதிய "இஸ்லாமிய அடிப்படைகளுக்கான ஓர் வழிகாட்டல்" என்ற நூலை நான் வாசித்தேன். இது மிகவும் பயனுள்ளதாகவும், எளிய நடையில் சிறப்பாகவும் இருக்கின்றது. அல்லாஹ் அவருக்கு நற்கூலிகளை வழங்குவதோடு, இதன் மூலம் பாரிய பலன்களை கிடைக்கப்பெறச் செய்திடவும் வேண்டும்.

எங்கள் தூதர் முஹம்மத் ﷺ அவர்களுக்கும், அவரின் குடும்பத்தார், தோழர்கள் அனைவருக்கும் அல்லாஹ்வின் சாந்தியும், சமாதானமும் உண்டாகட்டும்.

**ஸாலிஹ் பின் பவ்ஸான் அல் பவ்ஸான்**
மூத்த அறிஞர்கள் பேரவையின் உறுப்பினர்
10/02/1437

## நூலாசிரியரின் முன்னுரை

ஏகத்துவத்தின் பக்கமும், நபிவழியின் பக்கமும் எமக்கு வழிகாட்டிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். மக்களுக்கு நேர்வழியையும், அன்பையும் காட்டிய எமது தீர்க்கதரிசி முஹம்மத் ﷺ அவர்கள் மீதும், அவரின் குடும்பத்தார்கள், தோழர்கள் அனைவர் மீதும் அவனின் சாந்தியும், சமாதானமும் உண்டாகட்டும்.

ஏகத்துவத்தையும், இஸ்லாத்தின் அடிப்படை விதிகளையும் பற்றி கற்றுக்கொள்வது மிக முக்கியமான கடமையாகத் திகழ்கின்றது. இதனைக் கற்றுக்கொண்டால் தான் எமது கொள்கை சீர்பெறும், எமது வணக்க வழிபாடுகள் முஹம்மத் ﷺ அவர்கள் காட்டித் தந்த அமைப்பில் அல்லாஹ்வுக்காக மாத்திரம் நிறைவேற்றப்படும். இதற்காக வேண்டியே அல்குர்ஆன்-அஸ்ஸுன்னா ஒளியில் இஸ்லாமிய அறிஞர்கள் எமக்குக் கற்றுத் தந்ததன் பிரகாரம் இச் சுருக்கமான ஏட்டைத் தொகுத்து, அதற்கு,''இஸ்லாமிய அடிப்படைகளுக்கான ஓர் வழிகாட்டல்'' எனப் பெயரும் வைத்தேன். இதனை அனைவரும் விளங்கும் வகையில் மிகவும் எளிய நடையில், கேள்வி-பதில் அடிப்படையில் தொகுத்துள்ளேன்.

எனவே இதன் மூலம் அல்லாஹ்வின் திருப்பொருத்தம் எனக்குக் கிட்ட வேண்டுமெனவும், மக்களுக்கு இது நல்ல பயன்களை அளிக்க வேண்டுமெனவும் அவனிடம் வேண்டிக்கொள்கிறேன்.

எங்கள் தூதர் முஹம்மத் ﷺ அவர்களுக்கும், அவரின் குடும்பத்தார், தோழர்கள் அனைவருக்கும் அல்லாஹ்வின் சாந்தியும், சமாதானமும் உண்டாகட்டும்.

## முக்கிய மூன்று அடிப்படைகள்

**கேள்வி 01: முஸ்லிமான ஒவ்வொரு ஆணும், பெண்ணும் கட்டாயம் தெரிந்திருக்க வேண்டிய மூன்று அடிப்படைகள் எவை?**

*அவை வருமாறு:*

*1- அடியான் தன் இரட்சகனைப் பற்றி அறிந்திருத்தல்.*
*2- அடியான் தன் மார்க்கத்தை அறிந்திருத்தல்.*
*3- அடியான் தனது தூதர் முஹம்மத் ﷺ அவர்களை அறிந்திருத்தல்.*

**கேள்வி 02: உனது இரட்சகன் யார்?**

*எனது இரட்சகன் அல்லாஹ் ஒருவனே. அவனே என்னையும், இப் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தையும் தனது அருட்கொடைகளால் பரிபாலித்துக்கொண்டிருக்கிறான். நான் அவனையே வணங்க வேண்டும். அவனைத் தவிர வணக்கங்கப்படுவதற்கு தகுதியானவர்கள் வேறு எவரும் இல்லை.*

**கேள்வி 03: எதனைக் கொண்டு உன் இரட்சகனை அறிந்து கொண்டாய்?**

*எனது இரட்சகனை அவனது அத்தாட்சிகளைக் கொண்டும், அவனின் படைப்புக்களைக் கொண்டும் அறிந்துகொண்டேன். அவனின் அத்தாட்சிகளாக இரவு-பகல், சூரியன்-சந்திரன் போன்றன இருக்கின்றன. அவனின் படைப்புக்களாக ஏழு வானங்கள், ஏழு பூமிகள், அவைகளில் இருப்பவைகள், அவற்றுக்கு இடையில் இருப்பவைகள் போன்றன இருக்கின்றன.*

**கேள்வி 04: உனது மார்க்கம் என்ன?**

*எனது மார்க்கம் இஸ்லாம். இது ஏகத்துவத்தைக் கொண்டு அல்லாஹ்வுக்குப் பூரணமாக வழிப்படுவதையும், வணக்க வழிபாடுகளைக் கொண்டு அவனைத் திருப்திப்படுத்துவதையும், அவனுக்கு இணைவைக்கும் விடயங்களை விட்டும், இணைவைப்போரை விட்டும் விலகி நடப்பதையும் குறிக்கும்.*

**கேள்வி 05: மார்க்கத்தின் படித்தரங்கள் என்ன?**

*இம் மார்க்கத்தின் படித்தரங்கள் மூன்று. அவை வருமாறு:*

*1- இஸ்லாம். 2- ஈமான். 3- இஹ்ஸான்*

**கேள்வி 06: உனது தூதர் யார்?**

*முஹம்மத் பின் அப்துல்லாஹ் பின் அப்துல் முத்தலிப் பின் ஹாஷிம் என்பவரே எனது தூதர். இதில் ஹாஷிம் என்பவர் குரைஷிக் கோத்திரத்தைச் சேர்ந்தவர். குரைஷிக் கோத்திரத்தினர் அரேபிய வம்சாவழியில் தோன்றியவர்கள். அரேபியர்கள் இப்றாஹீம் عليه السلام அவர்களின் மகன் இஸ்மாயில் عليه السلام அவ்களின் வம்சாவழியைச் சேர்ந்தவர்கள்.*

## இஸ்லாத்தின் கடமைகளும், சாட்சி பகர்தல் பொருளும்.

**கேள்வி 07: இஸ்லாத்தின் அடிப்படைகள் அம்சங்கள் எவை?**

*இஸ்லாத்தில் ஐந்து அடிப்படை அம்சங்கள் இருக்கின்றன. அவை வருமாறு:*

*1- அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை எனவும், முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்வின் தூதர் எனவும் சாட்சி பகர்தல்.*
*2- தொழுகையை நிலை நாட்டுதல்.*
*3- ஸகாத்தை நிறைவேற்றுதல்.*
*4- ரமழான் மாதத்தில் நோன்பு நோற்றல்.*
*5-வசதி படைத்தவர்கள் இறைவனின் புனித ஆலயமான கஃபாவிற்குச் சென்று ஹஜ்ஜை நிறைவேற்றல்.*

**கேள்வி 08: "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என சாட்சி பகர்தல்" என்பதன் பொருள் யாது? அதற்கு ஏதும் ஆதாரம் உண்டா?**

*'யதார்த்தத்தில் அல்லாஹ்வைத் தவிர வணங்கப்படுவதற்குத் தகுதியானவர்கள் வேறு எவருமே கிடையாது' என்பது தான் அதன் பொருள். அதற்கான ஆதாரத்தை அல்லாஹ் அல்குர்ஆனில் பின்வருமாறு கூறுகிறான்.*

***"அல்லாஹ்வே உண்மையானவன். அவனையன்றி அவர்கள் பிரார்த்திப்பவை பொய்யானவை. அல்லாஹ் உயர்ந்தவன்; பெரியவன்."*** *(அல்குர்ஆன் 22:62)*

**கேள்வி 09: அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்ற கூற்றில் இடம் பெறும் அடிப்படைகள் எவை? அவற்றுக்கு ஏதும் ஆதாரம் உண்டா?**

*மேற்கூறப்பட்ட கூற்றிற்கு இரு அடிப்படைகள் இருக்கின்றன.*

*1- உறுதியாக மறுத்தல் (النفي)- இதனை "لا إله-வேறு இறைவன் இல்லை" என்ற வாசகம் விளக்குகின்றது.*

*2- உறுதியாக நம்புதல் (الإثبات) - இதனை "إلا الله-அல்லாஹ்வைத் தவிர" என்ற வாசகம் விளக்குகின்றது.*

*இதற்கான ஆதாரமாக பின்வரும் அல்குர்ஆன் வசனம் திகழ்கின்றது,*

*அல்லாஹ் கூறுகிறான், "தீய சக்திகளை மறுத்து அல்லாஹ்வை நம்புபவர் அறுந்து போகாத பலமான கயிற்றைப் பிடித்துக் கொண்டார்" (அல்குர்ஆன் 02:256)*

*"தீய சக்திகளை மறுத்து" என்ற வாசகம் **உறுதியாக மறுத்தல்** என்ற அடிப்படையையும், "அல்லாஹ்வை நம்புபவர்" என்ற வாசகம் **உறுதியாக நம்புதல்** என்ற அடிப்படையையும் தெளிவாக விளக்குகின்றன.*

**கேள்வி 10: "لَا إِلٰهَ إِلَّا الله-அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை" என்ற இக்கோட்பாட்டின் நிபந்தனைகள் என்ன?**

*இதற்கு மொத்தமாக 08 நிபந்தனைகள் இருக்கின்றன. அவை வருமாறு:*

*1- அறிவீனத்தை ஒழித்துக்கட்டும் **அறிவு**.*
*2- சந்தேகத்தை விரட்டியடிக்கும் **உறுதியான நம்பிக்கை**.*
*3- இணைவைப்பை ஒழித்துக்கட்டும் **தூய எண்ணம்**.*
*4- பொய்யை ஒழித்துக்கட்டும் **உண்மை**.*
*5- கோபத்தை ஒழித்துக்கட்டும் **அன்பு**.*
*6- விட்டுவிடுதலை ஒழித்துக்கட்டும் **ஏற்றுநடத்தல்**.*
*7- மறுப்பதை ஒழித்துக்கட்டும் **ஏற்கும் மனப்பாங்கு**.*
*8- அல்லாஹ் அல்லாத பிற தெய்வ வழிபாட்டை முற்றிலும் **நிராகரிக்கும் தன்மை**.*

*இவற்றை பின்வரும் கவிதையில் கண்டுகொள்ளலாம்.*

*அறிவுறுதி, தூயெண்ணம், உனது உண்மை*
*அன்போடு பின்பற்றி ஏற்றிடுவாய் அதனை*
*பிறதெய்வ வழிபாட்டை தகர்த்திடு - தன்னை*
*ஓர்ஏகன் அல்லாஹ்வை துதித்திடு நன்மை.*

**கேள்வி 11: "لَا إِلٰهَ إِلَّا الله-அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை" என்ற கோட்பாடு உன்னிடம் எவற்றை வேண்டி நிற்கின்றது?**

*இது இரு விடயங்களை என்னிடம் வேண்டி நிற்கின்றது.*

*1- ஏகத்துவத்தை உண்மைப்படுத்தி, அதற்காகவே எண்ணங்களைத் தூய்மைப்படுத்தி அல்லாஹ்வை விசுவாசம் கொள்ளல். இது உறுதியாக நம்புதல் எனும் அடிப்படையைக் குறித்து நிற்கின்றது.*

*2- அல்லாஹ்வைத் தவிர வணங்கப்படும் தெய்வங்களை வெறுத்து, இணைவைத்தல், இணைவைப்போர் போன்றோரிடமிருந்து விலகி நடந்து, இஸ்லாத்தை விட்டும் வெளியேறாமல் இருத்தல். இது உறுதியாக மறுத்தல் எனும் அடிப்படையைக் குறித்து நிற்கின்றது.*

✡✡✡✡

**கேள்வி 12: "முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்வின் தூதர்" என்ற வாசகத்தின் பொருள் என்ன?**

*அதன் பொருள் வருமாறு: முஹம்மத் என்பவர் அல்லாஹ்வின் அடிமையாவார். அவர் இவ்வுலக மக்கள் அனைவருக்கும் பொதுவாக அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட தூதுவர் ஆவார். அவர் அனைத்து தூதுவர்கள் மற்றும் தீர்க்கதரிசிகள் வரிசையில் இறுதியானவர்.*

✡✡✡✡

**கேள்வி 13: "முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்வின் தூதர்" என்ற கோட்பாடு உன்னிடம் எவற்றை வேண்டி நிற்கின்றது?**

*இது என்னிடம் பின்வரும் விடயங்களை வேண்டி நிற்கின்றது:*

*அவர் எமக்கு கற்றுத் தந்துள்ளதன் பிரகாரம் வழிபாடுகளை அமைத்துக்கொள்ளல், அவர் கூறிய அனைத்து விடயங்களையும் உண்மைப்படுத்தல், அவர் தடுத்த விடயங்களை விட்டும் தவிர்ந்து நடத்தல், அல்லாஹ் எமக்கு வழியுறுத்தியுள்ளதன் பிரகாரம் அவனை வணங்குதல் போன்றனவாகும்.*

✡✡✡✡

## நம்பிக்கை கொள்ள வேண்டிய அம்சங்களும், அதன் பிரதிபலன்களும்

**கேள்வி 14: இஸ்லாத்தில் நம்பிக்கை கொள்ள வேண்டிய அம்சங்கள் யாவை?**

*இஸ்லாத்தில் நம்பிக்கை கொள்ள வேண்டிய அம்சங்கள் ஆறு இருக்கின்றன. அவை:*

*1- அல்லாஹ்வை நம்புதல்.*
*2- அவனது வானவர்களை (மலக்குமார்களை) நம்புதல்.*
*3- அவனது வேதங்களை நம்புதல்.*
*4- அவனது தூதுவர்களை நம்புதல்.*
*5- மறுமை நாளை நம்புதல்.*
*6-நன்மை, தீமை என்ற நிர்ணயம் அல்லாஹ்விடமிருந்து ஏற்படுபவை என நம்புதல்.*

**கேள்வி 15: அல்லாஹ்வை நம்புதல் என்பதன் அர்த்தம் யாது?**

*அல்லாஹ் இருக்கிறான் என்பதை உறுதியாக உண்மைப்படுத்தி, அவனின் பரிபாலணம்[1], இறைமை[2], பெயர்கள் மற்றும் பண்புகள்[3] முதலியவற்றை உளமாற ஏற்றுக்கொள்வதை இது குறித்து நிற்கின்றது.*

**கேள்வி 16: அல்லாஹ்வை நம்புவதால் எமக்குள் ஏற்படும் பிரதிபலன்கள் யாவை?**

*இதனால் அதிகமான பிரதிபலன்கள் கிடைக்கின்றன. ஆயினும் பின்வருபவை அவற்றில் மிக முக்கியமானவை:*

*1- வழிபாடுகள் அனைத்தையும் எவ்வித இணையுமற்ற அல்லாஹ் ஒருவனுக்கு மாத்திரம் நிறைவேற்றுவதன் மூலம் அவனை ஒருமைப்படுத்துவதை உறுதிசெய்தல்.*

*2- அல்லாஹ்வின் கண்ணியமிக்க பெயர்கள் மற்றும் அவனது உயரிய பண்புகளின் மூலம் அவன் மீது பூரணமான அன்பை வெளிப்படுத்தி, அவனை கண்ணியப்படுத்தி, அவனை எப்போதும் அஞ்சிநடத்தல்.*

*3- அல்லாஹ் எமக்கு ஏவியவைகளை எடுத்து நடத்தல், விலக்கியவைகளை விட்டும் தவிர்ந்து நடத்தல் என்ற செயற்பாட்டின் மூலம் நமது அடிமைத்தனத்தை உறுதிசெய்துகொள்ளல்.*

---

*[1] இதன் முழுமையான அர்த்தத்தை அறிய கேள்வி இல 31 ஐப் பாருங்கள்.*
*[2] இதன் முழுமையான அர்த்தத்தை அறிய கேள்வி இல 33 ஐப் பாருங்கள்.*
*[3] இதன் முழுமையான அர்த்தத்தை அறிய கேள்வி இல 35 ஐப் பாருங்கள்.*

**கேள்வி 17: வானவர்களை (மலக்குமார்களை) நம்புதல் என்பதன் அர்த்தம் யாது?**

*அவர்கள் அல்லாஹ்வின் கண்ணியமான அடியார்கள், அல்லாஹ்வின் ஏவலுக்கு எப்போதும் மாறு செய்யாதவர்கள், அவன் ஏவியவைகளை அப்படியே எடுத்து நடப்பவர்கள், என ஏற்று, அவர்களின் இருப்பை உறுதியாய் உண்மைப்படுத்துவதே இதன் பொருளாக இருக்கின்றது.*

*அவ்வாறே தனது வானவர்களில் ஜிப்ரீல், மீகாயில், இஸ்ராபீல் என பெயர் குறிப்பிடப்பட்டோரையும், அவ்வாறு பெயர் குறிப்பிடப்படாதோரையும் நாம் விசுவாசம் கொள்ள வேண்டும்.*

**கேள்வி 18: வானவர்களை நம்புவதால் எமக்குள் ஏற்படும் பிரதிபலன்கள் யாவை?**

*இதன் மூலம் அதிகமான பிரதிபலன்கள் ஏற்படுகின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- வானவர்களை படைத்துள்ள விதத்திலிருந்து அல்லாஹ்வின் வல்லமை, பலம், அதிகாரம் போன்றவற்றை அறிந்துகொள்ள முடியும். படைப்பினங்களின் அபாரத் தன்மையானது அதனைப் படைத்தவனின் அபார ஆற்றலை வெளிப்படுத்துகின்றது.*

*2- இவ் வானவர்களை மனித வர்க்கத்துக்கு பொறுப்பாளிகளாக நியமித்து, அவர்களின் மூலம் மனிதர்களது ஒவ்வொரு செயற்பாடுகளையும் அல்லாஹ் கண்காணித்து வருவதன் மூலம் அல்லாஹ்வின் மீது அன்பு கொண்டு, அவனுக்கு நன்றியுள்ளவர்களாய் இருக்க முடியும்.*

*3- மனிதர்களது நன்மை தீமைகளை பதிவதற்காக இவ் வானவர்களை அல்லாஹ் நியமித்துள்ளதால் நன்மையான விடயங்களில் ஆர்வம் கொள்ளவும், தீமைகளைக் கண்டு அஞ்சிடவும் இது வழிகளை ஏற்படுத்துகிறது.*

**கேள்வி 19: வேதங்களை நம்புதல் என்பதன் அர்த்தம் யாது?**

*இவை அல்லாஹ்வின் வார்த்தைகள். அவை உண்மையும், தெளிவும் நிறைந்தவை, இவற்றை தனது தூதர்களுக்கு அவனே இறக்கி வைத்தான் என உறுதியோடு உண்மைப்படுத்துவதே இதன் அர்த்தமாகும். அவ்வாறே குர்ஆன், தவ்ராத், இன்ஜீல், ஸபூர் என பெயர் குறிப்பிட்டு வந்துள்ள வேதங்களையும், பெயர்குறிப்பிடப்படாமல் இருக்கும் ஏனைய வேதங்களையும் நாம் மனதார விசுவாசம் கொள்ள வேண்டும்.*

**கேள்வி 20: வேதங்களை நம்புவதால் எமக்குள் ஏற்படும் பிரதிபலன்கள் யாவை?**

*இதன் மூலம் அதிகமான பிரதிபலன்கள் ஏற்படுகின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- ஒவ்வொரு சமுதாயத்தினருக்கும் வேதங்களை இறக்கி, அவர்களை நேர்வழிப்படுத்துவதில் அல்லாஹ் மிகவும் அக்கறையுடன் செயற்பட்டிருப்பதை இதன் மூலம் விளங்கிக்கொள்ளலாம்.*

*2- ஒவ்வொரு சமுதாயத்தினருக்கும் அவர்களின் நிலைமைகளுக்கு ஏற்றாற்போல் மார்க்கக் கடமைகளை அல்லாஹ் விதியாக்கி இருந்தமையால் அவனின் மகிமையையும் இதன் மூலம் விளங்கிக்கொள்ளலாம்.*

*அல்லாஹ் கூறுகிறான்:* "**உங்களில் ஒவ்வொருவருக்கும் வாழ்க்கைத் திட்டத்தையும், வழியையும் ஏற்படுத்தியுள்ளோம்**" *(அல்குர்ஆன் 05:48)*

*3- வணக்க வழிபாடுகளை தெளிவாகக் காட்டித் தந்தமைக்காக அல்லாஹ்வுக்கு நன்றிசெலுத்திட வேண்டும்.*

*4- அல்குர்ஆனும், ஸுன்னாவும் கூறியதன் பிரகாரம் தெளிவான ஆதாரத்துடன் அல்லாஹ்வை வணங்குவதற்கு ஏதுவாக இது இருக்கும்.*

**கேள்வி 21: தூதர்களை நம்புதல் என்பதன் அர்த்தம் யாது?**

*இவ்வுலகிற்கு பல தூதர்கள் இறைவனால் அனுப்பப்பட்டுள்ளார்கள் என்றும், அவர்கள் கூறிய விடயங்கள் அனைத்தும் உண்மை எனவும் உறுதியாய் மெய்ப்படுத்துவதே இதன் அர்த்தமாகும். அவர்களில் பெயர் குறிப்பிடப்பட்டவர்களான நூஹ்ﷺ, இப்றாஹீம்ﷺ, மூஸாﷺ, ஈஸாﷺ, முஹம்மத்ﷺ போன்றோரையும், பெயர் குறிப்பிடப்படாத ஏனையோரையும் நாம் விசுவாசம் கொள்ள வேண்டும்.*

**கேள்வி 22: தூதர்களை நம்புவதால் எமக்குள் ஏற்படும் பிரதிபலன்கள் யாவை?**

*இதன் மூலம் அதிகமான பிரதிபலன்கள் ஏற்படுகின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- மனிதர்களை நேரான வழியில் செலுத்துவதற்காகவும், சீரான மார்க்கத்தில் நிலைப்படுத்திடவும் அல்லாஹ் தனது தூதர்களை அனுப்பி வைத்தான். இதன் மூலம், தன் அடியார்கள் மீது அவன் வைத்திருக்கும் இரக்கத் தன்மையை அறிந்துகொள்ள முடியும்.*

*2-தமக்கு அல்லாஹ்வால் வழங்கப்பட்ட வேதங்களினதும், தூதர்களினதும் சிறந்த வழிகாட்டுதலுடன் ஆதாரப்பூர்வமாக அல்லாஹ்வை வணங்கிட முடியும்.*

*3-இத்தூதர்கள் மீது நாம் அன்பு கொள்வதோடு, அவர்களை மகிமைப்படுத்தி, அவர்களின் தகுதிகளுக்கு ஏற்றாற்போல் அவர்களை புகழ்ந்திட வேண்டும்.*

*4-அல்லாஹ் மனிதர்களுக்கு அருளிய இப்பாரிய அருட்கொடைக்காக, அவனுக்கு நன்றி செலுத்திட வேண்டும்.*

**கேள்வி 23: மறுமை நாளை நம்புதல் என்பதன் அர்த்தம் யாது?**

*அது உலக முடிவு நாளாகும். அந்நாளில் மனிதர்கள் அனைவரும் விசாரணைக்காகவும், அதற்குத் தகுந்த கூலிகளைப் பெற்றிடவும் எழுப்பாட்டபடுவார்கள் என உறுதியாய் உண்மைப்படுத்துவதே இதன் அர்த்தமாகும்.*

**கேள்வி 24: மறுமை நாளை நம்புவதால் எமக்குள் ஏற்படும் பிரதிபலன்கள் யாவை?**

*மறுமை நாளை நம்புவதால் ஏற்படும் பிரதிபலன்கள்:*

*1- மறுமையில் தனக்குக் கிடைக்க இருக்கும் கூலிகளை எண்ணி, வணக்க வழிபாடுகளில் அதிக ஆர்வத்துடன் ஈடுபட முடியும்.*

*2- அந்நாளில் கிடைக்க இருக்கும் தண்டனைகளுக்குப் பயந்து, தீய காரியங்களை செய்வதையும், அவற்றை பொருந்திக் கொள்வதையும் அடியோடு வெறுத்திட முடியும்.*

*3-மறுமையில் தனக்கு நிரந்தரமாக கிடைக்க இருக்கும் அருட்கொடைகளை எண்ணி, இவ்வுலகில் தனக்குக் கிடைக்காமல் போகும் நிரந்தரமற்ற அருட்கொடைகளை பெரிதுபடுத்தாமல் இருக்க முடியும்.*

**கேள்வி 25: நன்மையும், தீமையும் விதிப்படியே நடைபெறும் என்று நம்புவதன் அர்த்தம் யாது?**

*எந்தவொரு நன்மையும், தீமையும் அல்லாஹ் நிர்ணயித்தவாரே நடைபெறும், அவன் தான் விரும்பியதை செய்யக்கூடியவன், அவன் நாடியது நடைபெறும், நாடாதது என்றும் நடைபெறாது என உறுதியாய் உண்மைப்படுத்துவதே இதன் அர்த்தமாகும்.*[1]

[1] *நன்மையும், தீமையும் அல்லாஹ்விடமிருந்தே எமக்குக் கிடைக்கின்றன. ஆனால் அல்லாஹ்வின் புரத்திலிருந்து வரும் தீமையில் ஓர் நளவு இருக்கும். -இமாம் இப்னு தைமியா ரஹிமஹுல்லாஹ்-*

**கேள்வி 26: நன்மையும், தீமையும் விதிப்படியே நடைபெறும் என்று நம்புவதால் எமக்குள் ஏற்படும் பிரதிபலன்கள் யாவை?**

*இதன் மூலம் அதிகமான பிரதிபலன்கள் எமக்குள் ஏற்படுகின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- எமது அனைத்து விடயங்களையும் அல்லாஹ்விடம் பொறுப்புச் சாட்டிவிட்டு, அதற்குத் தகுந்தாற்போல் காரணிகளை செய்வதிலும் அவன் மீது உறுதி கொள்ளலாம். அவன் தான் காரணிகளை ஏற்படுத்தித் தருபவன். அனைத்து விடயங்களும் அவனின் விதிப்படியே நடைபெறுகின்றன என நம்ப வேண்டும்.*

*2- அல்லாஹ் விதித்தவைகள் ஓர் அடியானுக்கு ஏற்படும் போது அதைப் பொருந்திக்கொண்டு, அமைதி காத்திட வேண்டும். தமக்கு விருப்பமான ஒன்று கிடைக்காமல் போகும் பட்சத்திலோ, அல்லது வெறுக்கத்தக்க விடயம் ஒன்று ஏற்படும் பட்சத்திலோ அல்லாஹ்வின் மீது கோபம் கொள்ளக்கூடாது.*

*3- நெருக்கடிகளை எதிர்கொள்ளும் போது மனஉறுதியுடன் இருக்க வேண்டும். திடமான நெஞ்சோடும், உண்மையான நம்பிக்கையோடும் வாழ்வின் அனைத்துக் கஷ்டங்களையும் எதிர்கொண்டிட வேண்டும்.*

*4- தான் நாடிய ஒன்று கிடைக்கும் போது தன்னையோ, அல்லது தனது செயற்பாட்டையோ ஒரு மனிதன் புகழ்ந்திடக் கூடாது. ஏனெனில் அவை அல்லாஹ்வின் நாட்டப்படியே இவனுக்குக் கிடைத்துள்ளது.*

## நன்னெறியும் (அல்இஹ்ஸான்) அதன் பிரதிபலன்களும்

**கேள்வி 27:** நன்னெறி (இஹ்ஸான்) என்பதன் அர்த்தம் யாது?

*நாம் அல்லாஹ்வை நேரில் பார்ப்பது போன்று அவனுக்குரிய வணக்கங்களை செய்திட வேண்டும். நாம் அவனைப் பார்க்காவிட்டாலும், அவன் நம்மைப் பார்த்துக்கொண்டிருக்கின்றான் என்பதே இஹ்ஸானின் (நன்னெறியின்) அர்த்தமாகும்.*

**கேள்வி 28:** இஹ்ஸானின் படித்தரங்கள் யாவை?

*இதற்கு இரு படித்தரங்களே இருக்கின்றன.*

*1- உளப் பார்வை: இதில் ஓர் அடியான், தான் இறைவனை பார்ப்பது போல் அவனை வணங்கிட வேண்டும். இதுவே உயர்ந்த படித்தரமாகும்.*

*2- கண்காணிப்பு: இதில் ஓர் அடியான் தன்னையும், தனது செயற்பாடுகள் அனைத்தையும் இறைவன் கவனித்துக்கொண்டிருக்கின்றான் என்பதை அறிந்திட வேண்டும்.*

**கேள்வி 29:** இஹ்ஸானின் மூலம் எமக்குள் ஏற்படும் பிரதிபலன்கள் யாவை?

*இதன் மூலம் அதிகமான பிரதிபலன்கள் ஏற்படுகின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- மறைவிலும், வெளிப்படையிலும், இரகசியத்திலும், பரகசியத்திலும் அல்லாஹ்வை அஞ்சிட முடியும்.*

*2- வணக்க வழிபாடுகளை அல்லாஹ்வுக்கு மாத்திரம் செய்வதில் உளத்தூய்மையைக் கடைபிடித்து, அவற்றைப் பூரணமாகவும், செம்மையாகவும் செய்திட வழிவகுக்கும்.*

*3- நன்னெறிகள் செய்வோருடன் அல்லாஹ் எப்போதும் இருக்கின்றான் என்ற எண்ணம் ஏற்படும்.*

*4- இதன் மூலம் சுவனத்தை வென்றிடவும், மறுமையில் அல்லாஹ்வை நேரடியாகப் பார்த்திடவும் இயலும்.*

## ஏகத்துவமும் அதன் சிறப்புக்களும்

**கேள்வி 30: ஏகத்துவத்தின் பிரிவுகள் யாவை?**

*இதற்கு மூன்று பிரிவுகள் இருக்கின்றன.*

*1- பரிபாலனம் (தவ்ஹீத் அர் ருபூபிய்யா).*
*2- இறைமை (தவ்ஹீத் அல் உலூஹிய்யா)*
*3- பெயர்கள் மற்றும் பண்புகள் (தவ்ஹீத் அல் அஸ்மாஉ வஸ் ஸிபாத்)*

**கேள்வி 31: பரிபாலனக் கோட்பாடு (தவ்ஹீத் அர்ருபூபிய்யா) என்பதன் அர்த்தம் யாது?**

*அல்லாஹ்வுடைய செயற்பாடுகளில் அவனை ஒருமைப்படுத்துவதே பரிபாலனக் கோட்பாடு ஆகும். உ+ம்: படைத்தல், உணவளித்தல், ஆட்சி புரிதல், நிர்வகித்தல், உயிர்ப்பித்தல், மரணிக்கச் செய்தல் போன்றன.*

**கேள்வி 32: ஒருவர் இஸ்லாத்தில் நுழைந்திட பரிபாலனக் கோட்பாட்டை மாத்திரம் நம்பியிருப்பது போதுமானதா?**

*இஸ்லாத்தில் நுழைந்திட பரிபாலனக் கோட்பாட்டை மாத்திரம் நம்பியிருத்தல் போதாது. ஏனெனில் நபி ﷺ அவர்கள் காலத்தில் வாழ்ந்த இணைவைப்போர் பரிபாலனக் கோட்பாட்டை நம்பியிருந்தனர். ஆனால் அவர்களுக்கு அது எவ்விதப் பயனையும் அளிக்கவில்லை. அல்லாஹ் கூறுகிறான், "**அவர்களைப் படைத்தவன் யார் என்று அவர்களிடமே நீர் கேட்டால் அல்லாஹ் என்று கூறுவார்கள். எவ்வாறு திசை திருப்பப்படுகின்றனர்?**" (அல்குர்ஆன் 43:87)*

**கேள்வி 33: இறைமைக் கோட்பாடு (தவ்ஹீத் அல் உலூஹிய்யா) என்பதன் அர்த்தம் யாது?**

*மனிதர்களது வணக்க வழிபாடுகள் மூலம் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவதே இதன் அர்த்தமாகும். "லா இலாஹ இல்லல்லாஹ்" என்ற வாசகத்தின் பொருளான வணக்க வழிபாடுகள் மூலம் அல்லாஹ்வை ஒருமைப்படுத்தல் என்ற அம்சத்தை இது குறித்து நிற்கின்றது.*

**கேள்வி 34: இறைமைக் கோட்பாட்டின் (தவ்ஹீத் அல் உலூஹிய்யாவின்) முக்கியத்துவம் யாது?**

*1- மனிதர்கள் மற்றும் ஜின்கள் முதலிய படைப்புகள் படைக்கப்பட்ட நோக்கம் இக்கோட்பாட்டை நிருவுவதற்கேயாகும்.*

*2- அனைத்து நபிமார்கள் மற்றும் ரஸூல்மார்களின் அழைப்புப் பணி இக்கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டே அமைந்திருந்தது.*

*3-அடியார்கள் மீதான அல்லாஹ்வின் கடமைகளை இது பிரதிபலிக்கின்றது.*

*4-அனைத்து நன்மையான காரியங்களும் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு இது இன்றியமையாத ஒன்றாக இருக்கின்றது.*

**கேள்வி 35: பெயர்கள் மற்றும் பண்புகளில் (தவ்ஹீத் அல் அஸ்மா வஸ் ஸிபாத்) அல்லாஹ்வை ஒருமைப்படுத்தல் என்பதன் அர்த்தம் யாது?**

*அல்குர்ஆனிலும், ஹதீஸிலும் இடம்பெற்றுள்ளவாறு அல்லாஹ்வுக்கு என இருக்கும் பெயர்கள் மற்றும் பண்புகளில் அவனை ஒருமைப்படுத்தி, அவன் தனக்கு இருப்பதாகக் கூறியுள்ள பெயர்கள் பண்புகளை இருப்பதாக உறுதியாக ஏற்றும், அவனுக்கு இல்லையெனக் கூறியுள்ள பெயர்கள் மற்றும் பண்புகளை இல்லையென்றும் எவ்வித இடைக்கணித்தலோ, மறுப்போ, இடைச்செறுகல்களோ, ஒப்புவமையோ இன்றி உறுதியாக நம்புவதே இதன் அர்த்தமாகும்.*

**கேள்வி 36: பெயர்கள் மற்றும் பண்புகள் விடயத்தில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*அல்லாஹ் தனக்கு இருப்பதாகக் கூறியுள்ள பெயர்கள் மற்றும் பண்புகளில் எவ்வித ஒப்புவமையும் இன்றி அவற்றை உறுதிப்படுத்திட வேண்டும். அவ்வாறே தனக்கு இல்லையெனக் கூறியவற்றில் எவ்வித செயல்நீக்கமுமின்றி, இல்லையென உறுதியாய் ஏற்று, அக்காரியங்களை விட்டும் அவனைத் தூய்மைப்படுத்திட வேண்டும். அல்லாஹ் கூறுகிறான், **"அவனைப் போல் எதுவும் இல்லை. அவன் செவியுறுபவன்; பார்ப்பவன்."** (அல்குர்ஆன் 42:11). இதில் இடம்பெற்றுள்ள "அவனைப் போல் எதுவும் இல்லை" என்ற வாசகம் அல்லாஹ்வின் பெயர் மற்றும் பண்புகளில் ஒப்புவமை கிடையாது எனவும், "அவன் செவியுறுபவன், பார்ப்பவன்" என்ற வாசகம் செயல்நீக்கம்[1] செய்வது கூடாது என்பதையும் குறித்து நிற்கின்றன.*

*[1] அல்லாஹ் செவியுறுபவன், பார்ப்பவன் என்ற வாசகம் அவனின் செயற்பாடுகளைக் குறிப்பிடுகின்றது. சிலர் இதற்கு வேறு அர்த்தங்களைக் கொடுத்து, அல்லாஹ்வின் செயற்பாடுகளை மறுக்க முனைகின்றனர். அதனை குறிக்கவே செயல்நீக்கம் எனும் சொல் இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது.*

**கேள்வி 37: அல்லாஹ்வின் பெயர்கள் மற்றும் பண்புகளின் முக்கியத்துவம் யாது?**

*1- அல்லாஹ்வின் மீது நம்பிக்கை (ஈமான்) அதிகரிக்கின்றது.*

*2- அல்லாஹ்வின் பெயர்கள் மற்றும் பண்புகளை அறிந்துகொள்வது, அவனைப் பற்றி அறிந்துகொள்ள வழிசெய்கின்றது.*

*3- அல்லாஹ்வின் மீது அன்பு (மஹப்பத்), பயம் (ஹவ்ப்), ஆதரவு (ரஜா) வைத்தல் முதலியவற்றின் மூலம் உள்ளம் சார்ந்த செயற்பாடுகள் பலமடைகின்றது.*

*4- ஜஹ்மிய்யாக்கள்[1], முஃதஸிலாக்கள்[2], அஷ்அரிய்யாக்கள்[3] போன்றோர் அல்லாஹ்வின் பெயர்கள் மற்றும் பண்புகளை மறுத்தல், அவற்றில் செயல்நீக்கம் செய்தல், ஒப்புவமை கூறல் போன்ற செயற்பாடுகளில் ஈடுபடுவதைப் போன்று நாம் ஈடுபடாமல் எம்மைப் பாதுகாக்கின்றது.*

**கேள்வி 38: ஏகத்துவத்தின் (தவ்ஹீதின்) சிறப்புக்கள் யாவை?**

*இதற்கு அதிகமான சிறப்புக்கள் இருக்கின்றன. அவற்றில் முக்கியமானவை வருமாறு:*

*1- தீமையான விடயங்கள், பாவங்கள் போன்றவற்றை மறுத்தல்.*
*2- இம்மையிலும், மறுமையிலும் பூரண பாதுகாப்புடன் இருத்தல்.*
*3- இவ்வுலகில் சிறந்த வாழ்வும், மறுவுலகில் பிரமாண்ட கூலியும் பெற்றுக்கொள்ளல்.*
*4- சுவனத்தில் நுழைதல்.*
*5- நரகில் இருந்து பாதுகாப்புப் பெறுதல்.*

[1] *இவர்கள் அல்லாஹ்வின் பெயர்கள் மற்றும் பண்புகள் அனைத்தையும் மறுத்து, அவற்றுக்கு வேறு பல அர்த்தங்களைக் கொடுப்பர்.*

[2] *இவர்கள் அல்லாஹ்வின் பெயர்களை நம்புவர். ஆனால் அல்லாஹ்வின் பண்புகளை மறுக்கின்றனர். அதற்கு வேறு பல அர்த்தங்களைக் கொடுக்கின்றனர்.*

[3] *இவர்கள் அல்லாஹ்வின் பெயர்களையும், அவனின் பண்புகளில் சிலதையும் ஏற்றுக்கொண்டு, ஏனைய அல்லாஹ்வின் பண்புகளை மறுக்கின்றனர். அவற்றுக்கு வேறு பல அர்த்தங்களைக் கொடுக்கின்றனர்.*

## மதம் மாறுதல்

**கேள்வி 39: மதம் மாறுதல் என்பதன் அர்த்தம் யாது? அதற்கு ஆதாரம் ஏதும் உண்டா?**

*இஸ்லாத்தை ஏற்றதன் பின்னர் திரும்ப அதனை நிராகரித்து விடுவதே மதம் மாறுதல் என்பதன் அர்த்தமாகும். அல்லாஹ் கூறுகிறான், **"உங்களில் தனது மார்க்கத்தை விட்டும் மாறி (ஏக இறைவனை) மறுப்போராக மரணித்தவரின் செயல்கள் இவ்வுலகிலும் மறுமையிலும் அழிந்து விடும். அவர்கள் நரகவாசிகள். அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள்."** (அல்குர்ஆன் 02:217)*

**கேள்வி 40: மதம் மாறுதலின் வகைகள் யாவை?**

*இது ஐந்து வகையாகப் பிரிகின்றது. அவை:*

*1- சொல்லினால் மதம் மாறுதல்.*
*2- செயற்பாடுகளால் மதம் மாறுதல்.*
*3- நம்பிக்கையின் அடிப்படையில் மதம் மாறுதல்.*
*4- சந்தேகத்தின் அடிப்படையில் மதம் மாறுதல்.*
*5- ஒன்றை விட்டுவிடுவதன் மூலம் மதம் மாறுதல்.*

**கேள்வி 41: சொல்லினால் மதம் மாறுவதற்கான உதாரணங்கள் யாவை?**

*சொல் சார்ந்த பல விடயங்கள் மூலம் மதம் மாறுதல் இடம்பெறுகின்றது. அவற்றில் சில வருமாறு:*

*1- அல்லாஹ்வை அல்லது அவனது தூதர் ﷺ அவர்களை ஏசுதல்.*
*2- தனக்கு மறைவான அறிவு இருப்பதாக வாதாடுதல்.*
*3- நபித்துவம் தனக்கு கிடைத்திருப்பதாக வாதாடுதல்.*
*4-அல்லாஹ்வைத் தவிர வேறு எவராலும் செய்ய முடியாத காரியங்களை அல்லாஹ் அல்லாதவர்களிடம் கேட்டு மன்றாடுதல்.*

**கேள்வி 42: செயற்பாடுகளினால் மதம் மாறுவதற்கான உதாரணங்கள் யாவை?**

*செயல் சார்ந்த பல விடயங்கள் மூலம் மத மாற்றம் நடைபெறுகின்றது. அவற்றில் சில வருமாறு:*

*1- சிலைகள், கற்கள், கப்ருகள் போன்றவற்றிற்கு சிரம் பணிதல்.*
*2- அவற்றுக்கு அறுத்துப் பலியிடுதல்.*

*3- அசுத்தமான இடங்களில் அல்குர்ஆனை வீசி எறிதல்.*
*4-சூனியம் செய்தல், அதை கற்றுக்கொள்ளல், அதைக் கற்றுக்கொடுத்தல்.*

**கேள்வி 43: நம்பிக்கையின் அடிப்படையில் மதம் மாறுதலுக்கான உதாரணங்கள் யாவை?**

*நம்பிக்கையின் அடிப்படையில் பலவாறு மதமாற்றம் நடைபெறுகின்றது. அவற்றில் சில வருமாறு:*

*1- அல்லாஹ்வுக்கு இணையாக வேறு ஒருவர் இருக்கிறார் என நம்புதல்.*

*2- மரணத்திற்குப் பின்னர் மீளெழுப்புதல் இல்லையென்றோ, சுவர்க்கம், நரகம் போன்றன இல்லையென்றோ நம்புதல்.*

*3- அல்லாஹ் தடுத்துள்ள (ஹராமாக்கிய) விடயங்களை ஆகுமாக்கி (ஹலாலாக்கிக் கொள்ளல்) கொள்ளல். உ+ம்: விபச்சாரம், மது போன்றன. அல்லது அல்லாஹ் சட்டமாக இறக்கி வைக்காத விடயங்களை வைத்து தீர்ப்பு வழங்கல்.*

*4- இஸ்லாத்தின் முக்கியக் கடமைகளை மறுத்தல். உ+ம்: தொழுகை, ஸகாத், ரமழான் மாத நோன்பு, ஹஜ்.*

**கேள்வி 44: சந்தேகத்தின் அடிப்படையில் மதமாற்றம் நடைபெறுவதற்கான உதாரணங்கள் யாவை?**

*சந்தேகத்தின் அடிப்படையில் பலவாறாக மதமாற்றம் நடைபெறுகின்றது. அவற்றில் சில வருமாறு:*

*1- மரணத்திற்குப் பின்னர் மீளெழுப்பப்படுதல் விடயத்தில் அல்லது சுவர்க்கம், நரகம் விடயத்தில் சந்தேகம் கொள்ளல்.*

*2- இஸ்லாமிய மார்க்கம் தற்காலத்திற்குப் பொருத்தமாகும் எனும் விடயத்தில் சந்தேகம் கொள்ளல்.*

*3- நபி ﷺ அவர்களின் தூதுத்துவத்திலோ, அல்லது அவர் ஓர் உண்மையாளர் என்பதிலோ சந்தேகம் கொள்ளல்.*

*4- அல்குர்ஆன் அல்லாஹ்வின் பேச்சு என்பதில் சந்தேகம் கொள்ளல்.*

**கேள்வி 45: ஒன்றை விட்டுவிடுவதன் மூலம் மதமாற்றம் இடம் பெறுவதற்கான உதாரணங்கள் யாவை?**

*வேண்டுமென்று தொழுகையை விட்டுவிடுதல் இந்த வகையைச் சார்ந்தது. நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,* **"*ஓர் மனிதருக்கும் இணைவைத்தலுக்கும், இறைநிராகரிப்பிற்கும் இடையிலுள்ள வித்தியாசம் தொழுகையை விட்டுவிடுவதாகும்*"** *(ஆதாரம்: முஸ்லிம் (82))*

۞۞۞۞

## இணைவைத்தல்

**கேள்வி 46: இணைவைத்தலின் வகைகள் யாவை?**

*இது இரு வகைகளைக் கொண்டுள்ளது.*

*1- பெரிய இணைவைத்தல்.*
*2- சிறிய இணைவைத்தல்.*

**கேள்வி 47: பெரிய இணைவைத்தல் என்றால் என்ன?**

*வணக்க வழிபாடுகளில் ஏதாவதொன்றை அல்லாஹ் அல்லாதவர்களுக்கு செய்தல் பெரிய இணைவைத்தல் எனப்படும்.*

**கேள்வி 48: பெரிய இணைவைத்தலுக்கு சில உதாரணங்களைக் குறிப்பிடுக.**

*இதற்கு அதிகமான உதராணங்கள் இருக்கின்றன. அவற்றில் சில வருமாறு:*

*அல்லாஹ் அல்லாதவர்களிடம் பிரார்த்தனை புரிதல், கப்ருகள், ஜின்கள், ஷைத்தான்கள் போன்ற அல்லாஹ் அல்லாதவர்களுக்கு அறுத்துப் பலியிட்டு, அவர்களிடம் நேர்ச்சை வைத்து அல்லாஹ்வை நெருங்க முயற்சித்தல், தேவைகளை நிறைவேற்றல், கஷ்டங்களை நீக்குதல் போன்ற அல்லாஹ்வால் மாத்திரமே செய்ய முடியுமான காரியங்களை அவன் அல்லாதவர்களிடம் வேண்டுதல்.*

**கேள்வி 49: பெரிய இணைவைப்பின் மூலம் இடம்பெறும் தீங்குகள் யாவை?**

*பெரிய இணைவைத்தலானது பெரும் பாவங்களில் ஒன்றாகக் கருதப்படுகின்றது. இதனால் அதிக தீங்குகள் ஏற்படுகின்றன. அவற்றில் சில வருமாறு:*

*1- பெரிய இணைவைத்தலானது எம்மை இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றிவிடும்.*

*2- இது அனைத்து நன்மையான காரியங்களையும் அழித்து விடும்.*

*3- இது ஒருவரை சுவனத்தில் நுழையவிடாது தடுத்து, நரகில் நிரந்தரமாகத் தங்கிட வழிசெய்யும்.*

**கேள்வி 50: பெரிய இணைவைப்பு நடைபெறுவதற்கான காரணங்கள் யாவை?**

*இதற்கு அதிகமான காரணங்கள் இருக்கின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- நல்லடியார்கள் விடயத்தில் எல்லைமீறிச் செயற்படல்.*

*2-ஏகத்துவம், லாஇலாஹ இல்லல்லாஹ் என்பதன் அர்த்தம் ஆகியவற்றை தெளிவாக விளங்காமல் இருத்தல்.*

*3- மனோ இச்சையைப் பின்பற்றல்.*

*4-அனைத்து விடயங்களிலும் கண்மூடித்தனமாக (தக்லீத் ஆக) இருத்தல்.*

**கேள்வி 51: சிறிய இணைவைப்பு என்றால் என்ன?**

*பெரிய இணைவைத்தலுக்கு இட்டுச் செல்லும் என இஸ்லாம் கூறியுள்ள, பெரிய இணைவைப்பில் நம்மை விழவைக்கும் என எச்சரித்துள்ள அனைத்து அம்சங்களும் சிறிய இணைவைப்பாகும். இதனைக் குறிக்க அல்குர்ஆனும், ஸுன்னாவும் 'ஷிர்க்' என்ற வாசகத்தையே பயன்படுத்தியுள்ளது.*

**கேள்வி 52: சிறிய இணைவைத்தலின் வகைகளைக் கூறுக.**

*இது இரு வகைகளாகப் பிரிகின்றது:*

*1- வெளிப்படையான இணைவைத்தல். இது இரு வகைப்படும்:*

*அ- வார்த்தைகள் மூலம் ஏற்படும் இணைவைப்பு: உ+ம்: அல்லாஹ் அல்லாதவர்கள் மீது சத்தியம் செய்தல், அல்லாஹ்வும், நீங்களும் நாடிவிட்டீர்கள் எனக் கூறுதல்.*

*ஆ- செயற்பாடுகள் மூலம் ஏற்படும் இணைவைப்பு: உ+ம்: ஆபத்துக்களிலிருந்து நீங்குவதற்காக கயிறுகளையும், வளையல்களையும் அணிந்துகொள்ளல், கண்ணூறு போன்றவை ஏற்படாமல் இருக்க தாயத்துக்களைத் தொங்கவிடுதல்.*

*2- மறைமுகமான இணைவைத்தல்: வணக்க வழிபாடுகளில் முகஸ்துதியாய் இருப்பது இந்த வகையைச் சார்ந்தது.*

**கேள்வி 53: பெரிய இணைவைப்பிற்கும், சிறிய இணைவைப்பிற்கும் இடையில் உள்ள வேறுபாடுகள் யாவை?**

*இவற்றிற்கிடையிலான வேறுபாடுகள் பின்வருமாறு அமைகின்றன:*

*1- பெரிய இணைவைப்பு ஒருவரை இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றிவிடும் - சிறிய இணைவைப்பு ஏகத்துவத்தில் குறையை ஏற்படுத்துமே தவிர இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றிவிடாது.*

*2- பெரிய இணைவைப்பு அனைத்து நற்செயல்களையும் அழித்து விடும் - சிறிய இணைவைப்பு முகஸ்துதியோடு சேர்ந்திருக்கும் நற்செயல்களை மாத்திரமே அழித்து விடும்.*

*3- பெரிய இணைவைப்பு ஒருவரை நரகில் நிலையாய் தங்கச் செய்திடும் - சிறிய இணைவைப்பு ஒருவர் நரகில் நுழைந்தாலும் அவர் அதில் நிரந்தரமாக தங்கிட வழிசெய்யாது.*

## நயவஞ்சகம்

**கேள்வி 54: நயவஞ்சகத்தின் வகைகள் யாவை?**

*இது இரு வகைப்படும்:*

*1- நம்பிக்கை சார்ந்த நயவஞ்சகம். இதற்கு பெரிய நயவஞ்சகம் என்று சொல்லப்படும்.*
*2- செயற்பாடுகள் சார்ந்த நயவஞ்சகம். இதற்கு சிறு நயவஞ்சகம் என்று சொல்லப்படும்.*

**கேள்வி 55: நம்பிக்கை சார்ந்த நயவஞ்சகம் என்றால் என்ன?**

*இது இஸ்லாத்தை வெளிப்படுத்தி, இறை நிராகரிப்பை மறைத்து வைத்திருப்பதைக் குறிக்கின்றது.*

**கேள்வி 56: நம்பிக்கை சார்ந்த நயவஞ்சகத்தின் வகைகள் யாவை?**

*இது ஆறு வகைப்படும். அவையாவன:*

*1- நபி ﷺ அவர்களைப் பொய்ப்பித்தல்.*
*2- நபி ﷺ அவர்கள் கொண்டுவந்த இறைச் செய்திகளில் சிலதைப் பொய்ப்பித்தல்.*
*3- நபி ﷺ அவர்கள் மீது கோபப்படுதல்.*
*4- நபி ﷺ அவர்கள் கொண்டு வந்த இறைச் செய்திகள் மீது கோபம் கொள்ளல்.*
*5- இஸ்லாம் மார்க்கம் தாழ்வதைக் கண்டு சந்தோசமடைதல்.*
*6-இஸ்லாம் மார்க்கம் வெற்றி நடை போடுவதைக் கண்டு வெறுப்படைதல்.*

**கேள்வி 57: செயற்பாடுகள் சார்ந்த நயவஞ்சகம் என்றால் என்ன ?**

*இது, உள்ளத்தில் இஸ்லாமிய நம்பிக்கையோடு (ஈமானோடு) இருந்துகொண்டே நயவஞ்சகர்களின் காரியங்களைப் புரிவதைக் குறிக்கின்றது. உ+ம்: பொய் சொல்லல், ஏமாற்றுதல், ஜமாஅத்தோடு தொழுவதற்கு சோம்பலாக இருத்தல்.*

**கேள்வி 58: நம்பிக்கை சார்ந்த நயவஞ்சகத்திற்கும், செயற்பாடுகள் சார்ந்த நயவஞ்சகத்திற்கும் இடையிலுள்ள வேறுபாடுகள் யாவை?**

*இவை இரண்டிற்கும் இடையிலுள்ள வேறுபாடுகள் பின்வருமாறு அமைகின்றன.*

*1- நம்பிக்கை சார்ந்த நயவஞ்சகம் ஒருவரை இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றி விடும் - செயற்பாடுகள் சார்ந்த நயவஞ்சகம் ஒருவரை இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றிவிடாது.*

*2- நம்பிக்கை சார்ந்த நயவஞ்சகத்தில் இஸ்லாத்தை வெளிப்படுத்தி, இறை நிராகரிப்பை மறைத்துக் கொள்வதும், செயற்பாடுகள் சார்ந்த நயவஞ்சகத்தில் இறை நிராகரிப்பை வெளிப்படுத்தி, இஸ்லாத்தை மறைத்துக் கொள்வதும் இடம்பெறும்.*

*3- நம்பிக்கை சார்ந்த நயவஞ்சகம் ஒரு இறை நம்பிக்கையாளனிடம் ஏற்பட மாட்டாது. செயற்பாடுகள் சார்ந்த நயவஞ்சகம் சில வேளை ஓர் இறை நம்பிக்கையாளனிடமும் ஏற்படலாம்.*

## (இபாதத்) வணக்கவழிபாடுகளும், தடுக்கப்பட்ட(பித்அத்) நூதன அனுஷ்டானங்களும்

**கேள்வி 59: அல்லாஹ் ஏன் எம்மைப் படைத்தான்? இதற்கான ஆதாரத்தைக் குறிப்பிடுக?**

*நாம் அனைவரும் எவ்வித இணைவைப்பும் இல்லாமல் அவன் ஒருவனையே வணங்குவதற்காக எம்மை அவன் படைத்தான். அல்லாஹ் கூறுகிறான்,* ***"ஜின்களையும், மனிதர்களையும் என்னை வணங்குவதற்காகவே நான் படைத்தேன்"*** *(அல்குர்ஆன் 51:56)*

۞۞۞۞

**கேள்வி 60: வணக்கம் என்றால் என்ன?**

*எமது வார்த்தைகள், செயல்கள் போன்றவற்றில் உள்ரங்கமாகவும், வெளிப்படையாகவும் அல்லாஹ் விரும்பி, பொருந்திக்கொள்ளும் வகையில் அவை இருக்குமானால், அவை அனைத்தும் வணக்கமாகும்.*

۞۞۞۞

**கேள்வி 61: வணக்கம் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கான நிபந்தனைகள் யாவை?**

*இதற்கு இரு நிபந்தனைகள் இருக்கின்றன.*

*1- வணக்கத்தை அல்லாஹ்வுக்காக மாத்திரம் நிறைவேற்றல் (அல் இஃலாஸ்).*
*2- நபி ﷺ அவர்களின் வழிமுறையில் அதை செய்தல் (அவர்களைப் பின்பற்றல்).*

۞۞۞۞

**கேள்வி 62: அல் இஃலாஸ் என்றால் என்ன?**

*இது, வணக்கங்கள் அனைத்தையும் எவ்வித இணைவைப்போ, முகஸ்துதியோ இன்றி அல்லாஹ்வுக்காக மாத்திரம் நிறைவேற்றுவதைக் குறிக்கின்றது.*

۞۞۞۞

**கேள்வி 63: அல்லாஹ்வுக்காக வேண்டி மாத்தரிமே அனைத்து வணக்கங்களையும் நிறைவேற்றிட வேண்டும் என்பதற்கு ஏதும் ஆதாரங்கள் உண்டா?**

*ஆம், அல்லாஹ் கூறுகிறான்,* ***"வணக்கத்தை அல்லாஹ்வுக்கே கலப்பற்றதாக்கி வணங்குமாறும், உறுதியாக நிற்குமாறும், தொழுகையை நிலை நாட்டுமாறும், ஸகாத்தைக் கொடுக்குமாறும் தவிர அவர்களுக்கு வேறு கட்டளை பிறப்பிக்கப்படவில்லை."*** *(அல்குர்ஆன் 98:05)*

۞۞۞۞

**கேள்வி 64: நபி ﷺ அவர்களைப் பின்பற்றல் என்றால் என்ன?**

*வணக்க வழிபாடுகள் இஸ்லாத்திற்கு ஏற்றதாகவும், எவ்வித நூதன அனுஷ்டானங்கள் (பித்அத்துக்கள்) இல்லாமலும் இருக்க வேண்டுமானால், நபி ﷺ அவர்களை முன்னுதாரணமாக நிறுத்தி, அவர்களைப் பின்பற்றிட வேண்டும்.*

۞۞۞۞

**கேள்வி 65: நபி ﷺ அவர்களைப் பின்பற்றுவது கடமை என்பதற்கு ஏதும் ஆதாரம் உண்டா?**

*ஆம், அல்லாஹ் கூறுகிறான்,* **“”*நீங்கள் அல்லாஹ்வை விரும்பினால் என்னைப் பின்பற்றுங்கள்! அல்லாஹ் உங்களை விரும்புவான். உங்கள் பாவங்களை மன்னிப்பான். அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்” என்று கூறுவீராக!*”** *(அல்குர்ஆன் 03:31)*

۞۞۞۞

**கேள்வி 66: பித்அத் (நூதன அனுஷ்டானங்கள்) என்றால் என்ன?**

*இது, அல்லாஹ் கடமையாக்காத விடயங்கள் மூலம் அவனை வணங்குவதைக் குறிக்கின்றது. இவைகளை மனிதர்கள் தமக்குத் தாமே உருவாக்கிக் கொண்டவைகள். இதற்கு அல்குர்ஆனிலோ, ஸுன்னாவிலோ, நாற்பெரும் கலீபாக்களின் செயற்பாடுகளிலோ எவ்வித சான்றையும் பெற்றிட முடியாது.*

۞۞۞۞

**கேள்வி 67: பித்அத்துக்கான (நூதன அனுஷ்டானங்களுக்கான) சட்டவிளக்கம் யாது? ஆதாரத்துடன் குறிப்பிடவும்.**

*இஸ்லாத்தில் புதிதாக உருவாக்கப்பட்ட அனைத்து நூதன அனுஷ்டானங்களும் தடுக்கப்பட்ட வழிகேடாகும். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,* **“*எமது இம் மார்க்கத்தில் யார் இல்லாத ஒன்றை புதிதாக உருவாக்குகிறாரோ, அவர் எம்மைச் சார்ந்தவரல்ல.*”** *(ஆதாரம்: புஹாரி 2697, முஸ்லிம் 1718). மேலும் கூறினார்கள்,* **“*அனைத்து பித்அத்துக்களும் (நூதன அனுஷ்டானங்களும்) வழிகேடாகும்*”** *(ஆதாரம்: முஸ்லிம் 867).*

۞۞۞۞

**கேள்வி 68: பித்அத்தின் (நூதன அனுஷ்டானங்களின்) வகைகள் யாவை?**

*இது இரு வகைப்படும்:*
*1- நம்பிக்கை சார்ந்த, சொல் சார்ந்த பித்அத்துக்கள். உ+ம்: ஜஹ்மிய்யாக்கள், முஃதஸிலாக்கள், ஹவாரிஜ்கள், ஷீயாக்கள் போன்ற வழிகெட்ட கொள்கையினரின் கூற்றுக்களும், அவர்களின் நம்பிக்கைகளும்.*

*2- வணக்கங்கள் சார்ந்த பித்அத்துக்கள். உ+ம்: அல்லாஹ் கடமையாக்காத முறையில் ஓர் வணக்கத்தைப் புரிதல். இதில் சில பிரிவுகள் இருக்கின்றன.*

*அ)வணக்கத்தின் அடிப்படை அம்சத்தில் ஏற்படக்கூடிய பித்அத்துக்கள். உ+ம்: கப்ருகளை வலம் வருதல், நபி ﷺ, மற்றும் நல்லடியார்களின் பிறந்த தினங்களைக் கொண்டாடுதல்.*

*ஆ) கடமையாக்கப்பட்ட ஓர் வணக்கத்தை, நிறைவேற்றும் முறையில் ஏற்படும் பித்அத்துக்கள். உ+ம்: கூட்டாக அல்லாஹ்வுக்கு திக்ர் செய்தல்.*

*இ) கடமையாக்கப்பட்ட ஓர் வணக்கத்தை நிறைவேற்றிட இஸ்லாம் குறிப்பிடாத நேரங்களை ஒதுக்குவதில் ஏற்படும் பித்அத்துக்கள். உ+ம்: ஷஃபான் மாதத்தின் 15ம் நாளை நோன்பு நோன்பதற்கென ஒதுக்குதல், அந்நாளில் இரவு வணக்கங்களை அதிகமாக நிறைவேற்றிட வேண்டுமென நேரம் குறித்தல்.*

**கேள்வி 69: பித்அத்துக்களுக்கு சில உதாரணங்களைக் குறிப்பிடுக.**

*இதற்கு அதிகமான உதாரணங்கள் இருக்கின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- நபி ﷺ அவர்களின் பிறந்த தினத்தைக் கொண்டாடுதல்.*
*2- இஸ்ரா-மிஃராஜ் நடைபெற்ற இரவைக் கொண்டாடுதல்.*
*3- கப்ருகள் மீது கட்டிடங்களைக் கட்டி, அவற்றை வணக்கஸ்தலமாக மாற்றியமைத்தல்.*

**கேள்வி 70: பித்அத்துக்கள் ஏற்படுவதற்கான காரணங்கள் யாவை?**

*இதற்கு அதிகமான காரணங்கள் இருக்கின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- மார்க்க சட்டங்களில் தெளிவில்லாமை.*
*2- மனோ இச்சையைப் பின்பற்றல்.*
*3- குருட்டுத் தனமாக, எதுவித ஆதாரமுமின்றி மற்றவர்களைப் பின்பற்றல்.*
*4- இறை நிராகரிப்பாளர்களுக்கு (காபிர்களுக்கு) ஒப்பாகுதல்.*

## வுழூவும், குளிப்பும்.

**கேள்வி 71: வுழூ என்பதன் அர்த்தம் யாது?**

*இது சில குறிப்பிட உறுப்புக்களை தடவி, கழுவுவதைக் குறிக்கும்.*

**கேள்வி 72: வுழூவின் நிபந்தனைகள் யாவை?**

*இதற்கு பத்து நிபந்தனைகள் இருக்கின்றன:*

*1- முஸ்லிமாக இருத்தல்.*
*2- புத்தியுள்ளவராய் இருத்தல்.*
*3- பிரித்தறியும் வயதை அடைந்திருத்தல்.*
*4- மனதால் நினைத்தல் (நிய்யத்).*
*5- தான் பூரணமாக தூய்மையாகும் வரை இடைநிறுத்த மாட்டேன் என எண்ணி, தொடர்ந்து செய்தல்.*
*6- வுழூவை கடமையாக்கும் காரியங்களிலிருந்து நீங்கியிருத்தல்.*
*7- மலசலம் போன்றவைகள் ஏற்பட்டால் வுழூ செய்வதற்கு முன்னரே அதிலிருந்து தண்ணீரினாலோ, அல்லது அழுக்கை நீக்கக்கூடி ஏனையவற்றாலோ சுத்தமாகிடுதல்.*
*8- வுழூ செய்யும் நீர் சுத்தமானதாகவும், ஆகுமானதாகவும் இருத்தல்.*
*9- தோலில் தண்ணீர் செல்வதற்குத் தடையாக இருப்பவற்றை நீக்குதல்.*
*10- அடிக்கடி தொடக்கு ஏற்படுபவர் வுழூ செய்ய வேண்டுமாக இருந்தால் தொழுகை நேரம் நுழைந்திருத்தல்.*

**கேள்வி 73: வுழூவின் கடமைகள் யாவை?**

*இதற்கு ஆறு கடமைகள் இருக்கின்றன. அவை:*

*1- முகத்தைக் கழுவுதல், - அத்தோடு வாயைக் கொப்பளித்து, நாசிக்குள்ளும் தண்ணீர் செலுத்திக்கொள்ள வேண்டும்-.*
*2- முழங்கை உட்பட இரு கைகளையும் கழுவுதல்.*
*3- தலையின் அனைத்துப் பகுதிகளையும் நீரால் தடவுதல், - அத்தோடு இரு காதுகளையும் தடவிக்கொள்ளல்-.*
*4- கரண்டைக் கால் உட்பட இரு கால்களையும் கழுவுதல்.*
*5- மேற்கூறப்பட்ட ஒழுங்குமுறையில் செய்தல்.*
*6- தொடராகச் செய்தல்.*

**கேள்வி 74: வுழுவை முறிக்கும் காரியங்கள் யாவை?**

*வுழுவை நான்கு காரியங்கள் முறிக்கின்றன. அவை:*

*1- சிறுநீர், மலம், ஆசை நீர் (மதி), காற்று போன்றவைகள் முன்பின் துவாரங்களினால் வெளிப்படல்.*
*2- பைத்தியம், மயக்கம், ஆழ்ந்த உறக்கம் போன்றவற்றால் சுயநினைவை இழத்தல்.*
*3- ஒட்டக இறைச்சியைச் சாப்பிடல்.*
*4- எவ்விதத் திரையுமின்றி நேரடியாக மர்ம உறுப்பைத் தொடல்.*

✡✡✡✡

**கேள்வி 75: வுழு முறிந்து விட்டால் திரும்ப வுழு செய்துகொள்ள வேண்டும் என்பதற்கு ஏதும் ஆதாரங்கள் உண்டா?**

*ஆம், அல்லாஹ் கூறுகிறான்,* ***"நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் தொழுகைக்காகத் தயாராகும் போது உங்கள் முகங்களையும், முட்டுக்கள் வரை உங்கள் கைகளையும், கரண்டை வரை உங்கள் கால்களையும் கழுவிக் கொள்ளுங்கள்! உங்கள் தலைகளை (ஈரக்கையால்) தடவிக் கொள்ளுங்கள்"*** *(அல்குர்ஆன் 05:06)*

✡✡✡✡

**கேள்வி 76: குளிப்பு என்பதன் அர்த்தம் யாது?**

*குறிப்பிட்ட முறையில் தண்ணீரை முழு உடம்பில் படரவிடுவதை இது குறிக்கின்றது.*

✡✡✡✡

**கேள்வி 77: குளிப்பைக் கடமையாக்கும் விடயங்கள் யாவை?**

*குளிப்பை மூன்று விடயங்கள் கடமையாக்குகின்றன. அவை:*

*1- இந்திரியம் வெளிப்படல்.*
*2- உடலுறவு கொள்ளல் - இந்திரியம் வெளிப்படாவிட்டாலும் குளிப்பு கடமையாகிவிடும்-.*
*3- மாதவிடாய் அல்லது மகப்பேற்று இரத்தம் வெளிப்படல்.*

✡✡✡✡

**கேள்வி 78: குளிப்பு கடமையானால் கட்டாயம் குளித்துக்கொள்ள வேண்டும் என்பதற்கு ஏதும் ஆதாரம் உண்டா?**

*ஆம், அல்லாஹ் கூறுகிறான்,* **"*குளிப்புக் கடமையானோராக நீங்கள் இருந்தால் (குளித்து) தூய்மையாகிக் கொள்ளுங்கள்!*"** *(அல்குர்ஆன் 05:06)*

۞۞۞۞

**கேள்வி 79: வுழூ மற்றும் குளிப்பின் மூலம் கிடைக்கப்பெறும் சிறந்த அம்சங்கள் யாவை?**

*இவற்றின் மூலம் அதிக நல்ல பல கருமங்கள் நடைபெறுகின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- இஸ்லாம் என்பது மகத்தான ஓர் மார்க்கமாகும். இது உளரீதியான, சடரீதியான சுத்தங்களை வழியுறுத்தி நிற்கின்றது.*
*2- வுழூ செய்யும் உறுப்புக்களால் நிகழ்ந்திருக்கும் பாவங்களை வுழூ சுத்தப்படுத்துகின்றது.*
*3- உடம்பின் ஆரோக்கியத்தைப் பாதுகாத்து, அதனை சுருசுருப்பாக வைத்திருக்கின்றது.*
*4- அல்லாஹ்வோடு உரையாட, சிறந்த முறையில் எம்மைத் தயார் செய்கின்றது.*

۞۞۞۞

## தொழுகை

**கேள்வி 80: தொழுகை என்பதன் அர்த்தம் யாது?**

*இது, சில குறிப்பிட்ட வார்த்தைகளையும், செயல்களையும் கொண்ட ஓர் வணக்கமாகும். இது தக்பீரைக் கொண்டு ஆரம்பித்து, ஸலாம் கொடுப்பதில் முடிவடைகின்றது.*

۞۞۞۞

**கேள்வி 81: ஒவ்வொரு முஸ்லிமான ஆண், பெண் இருவருக்கும் கடமையாக இருக்கும் தொழுகைகள் யாவை?**

*ஐந்து நேரத் தொழுகைகள் இருபாலாருக்கும் கட்டாயமாக இருக்கின்றன. அவை:*

*1- ஃபஜ்ர் - அதிகாலைத் தொழுகை (இரண்டு ரக்அத்துக்கள்).*
*2- லுஹர் - பகல் வேளைத் தொழுகை (நான்கு ரக்அத்துக்கள்).*
*3- அஸர் - பின்னேரத் தொழுகை (நான்கு ரக்அத்துக்கள்).*
*4- மஃரிப் - முன் இரவுத் தொழுகை (மூன்று ரக்அத்துக்கள்).*
*5- இஷா - இரவுத் தொழுகை (நான்கு ரக்அத்துக்கள்)*

۞۞۞۞

**கேள்வி 82: இவ் ஐந்து நேரத் தொழுகைகளும் கட்டாயக் கடமை என்பதற்கு ஏதும் ஆதாரம் உண்டா?**

*ஆம், அல்லாஹ் கூறுகிறான், **"தொழுகைகளையும், நடுத் தொழுகையையும் பேணிக் கொள்ளுங்கள்! அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டு நில்லுங்கள்!"** (அல்குர்ஆன் 02:238)*

۞۞۞۞

**கேள்வி 83: இத் தொழுகைகளை விட்டு விடுபவருக்கான சட்டநிலை யாது? அதற்கு ஏதும் ஆதாரம் உண்டா?**

*தொழுகையை விடுவது இறை நிராகரிப்பு (குப்ர்) ஆகும். இது எம்மை இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றிவிடும். நபி ﷺ அவர்கள் கூறினார்கள், **"ஓர் மனிதனுக்கும், இணை வைத்தலுக்கும், இறை நிராகரிப்பிற்கும் இடையிலுள்ள வேறுபாடு தொழுகையை விட்டுவிடுவதாகும்"** (ஆதாரம்:முஸ்லிம் 82)*

۞۞۞۞

**கேள்வி 84: தொழுகையின் நிபந்தனைகள் யாவை?**

*இதற்கு ஒன்பது நிபந்தனைகள் இருக்கின்றன. அவை:*

*1- முஸ்லிமாக இருத்தல்.*
*2- புத்தியுள்ளவராக இருத்தல்.*
*3- பிரித்தறியும் வயதை அடைந்திருத்தல்.*
*4- தொடக்கிலிருந்து நீங்கியிருத்தல்.*
*5- அசுத்தங்களை நீக்கியிருத்தல்.*
*6- மர்ம உறுப்புக்களை மறைத்தல்[1].*
*7- தொழுகைக்கான நேரம் நுழைதல்.*
*8- கிப்லாவை முன்னோக்குதல்.*
*9- மனதால் எண்ணுதல் (நிய்யத்).*

**கேள்வி 85: தொழுகையின் அடிப்படைக் கடமைகள் (ருக்குன்கள்) யாவை?**

*இதற்கு பதிநான்கு அடிப்படைக் கடமைகள் இருக்கின்றன. அவை:*

*1- முடியுமானவர் எழுந்து நிற்றல்.*
*2- ஆரம்பத் தக்பீரைக் கட்டுதல்.*
*3- சூறதுல் பாதிஹாவை ஓதுதல்.*
*4- ருக்கூவிற்குச் செல்லல்.*
*5- ருக்கூவிலிருந்து எழுந்து, நிலைக்கு வருதல்.*
*6- ஏழு உறுப்புக்களினால்[2] சிரம் பணிதல் (ஸுஜூது செய்தல்).*
*7- ஸுஜூதிலிருந்து எழுதல்.*
*8- இரு ஸுஜூதுகளுக்கு இடையில் அமருதல்.*
*9- அனைத்து நிலைகளிலும் சற்று தாமதித்து வருதல்.*
*10- மேற்கூறப்பட்ட ஒழுங்கில் நிறைவேற்றல்.*
*11- இறுதி அத்தஹிய்யாத்து.*
*12- அதற்காக அமருதல்.*
*13- நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத்துச் சொல்லல்.*
*14- இரண்டு ஸலாம் சொல்லி தொழுகையை முடித்தல்.*

[1] *மர்ம உறுப்பிற்கு அரபியில் அவ்ரத் எனக் கூறப்படும். ஆண்களுக்கு தொப்புலுக்கும், இரு முழங்காலுக்கும் இடைப்பட்ட பகுதி அவ்ரத் எனவும், பெண்களுக்கு முகம், இரு மணிக்கட்டுக்கள் தவிர்ந்த உடலின் ஏனைய பகுதிகள் அவ்ரத் எனவும் இஸ்லாம் வரையறை செய்துள்ளது.*

[2] *முகத்துடன் சேர்த்து நெற்றி, இரு உள்ளங்கைகள், இரு முழங்கால்கள், இரு காலினதும் பெருவிரல்கள் என்பனவே ஸுஜூது செய்யப்பயன்படும் ஏழு உறுப்புக்கள்.*

**கேள்வி 86:** **சூறதுல் பாத்திஹா என்றால் என்ன?**

*இது அல்குர்ஆனில் இருக்கும் மிக மகத்தான அத்தியாயமாகும். இதை ஓதாவிட்டால் தொழுகை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. அது:*

الْحَمْدُ للهِّ رَبِّ الْعَالَمِينَ

*"அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்."*
*எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. (அவன்) அகிலத்தைப் (படைத்துப்) பராமரிப்பவன்.*

الرَّحْمَنِ الرَّحِيمِ

*"அர்ரஹ்மானிர் ரஹீம்."*
*அளவற்ற அருளாளன். நிகரற்ற அன்புடையோன்.*

مَالِكِ يَوْمِ الدِّينِ

*"மாலிகி யவ்மித்தீன்."*
*தீர்ப்பு நாளின் அதிபதி.*

إِيَّاكَ نَعْبُدُ وَإِيَّاكَ نَسْتَعِينُ

*"இய்யாக்க நஃபுது வ இய்யாக்க நஸ்த்தயீன்."*
*(எனவே) உன்னையே வணங்குகிறோம். உன்னிடமே உதவியும் தேடுகிறோம்.*

اهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيمَ

*"இஹ்தினஸ் ஸிராத்தல் முஸ்த்தகீம்."*
*எங்களை நேர் வழியில் செலுத்துவாயாக!*

صِرَاطَ الَّذِينَ أَنْعَمْتَ عَلَيْهِمْ غَيْرِ الْمَغْضُوبِ عَلَيْهِمْ وَلاَ الضَّالِّينَ

*"ஸிராத்தல்லதீன அன்அம்த்த் அலைஹிம்கைரில் மஃ(க்)ளுபி அலைஹிம்வலல் ளால்லீன்."*
*அது நீ யாருக்கு அருள் புரிந்தாயோ அவர்கள் வழி. அவர்கள் (உன்னால்) கோபிக்கப் படாதவர்கள், மற்றும் பாதை மாறிச் செல்லாதவர்கள்.*

**கேள்வி 87:** **தொழுகையின் முக்கியக் கடமைகள் (வாஜிபுகள்) யாவை?**

*இதற்கு எட்டு முக்கியக் கடமைகள் இருக்கின்றன. அவை:*

*1- ஆரம்பத் தக்பீரைத் தவிர மற்ற அனைத்து தக்பீர்கள்.*
*2- ருக்கூவில், ''ஸுப்ஹான ரப்பியல் அழீம்'' எனக் கூறல்.*
*3- தனியாகத் தொழுபவரும், இமாமும் ''ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா'' எனக் கூறல்.*
*4- அனைவரும் ''ரப்பனா வலகல் ஹம்த்'' எனக் கூறல்.*
*5- ஸுஜூதில் ''ஸுப்ஹான ரப்பியல் அஃலா'' எனக் கூறல்.*
*6- இரு ஸுஜூதுகளுக்கு மத்தியில் ''ரப்பிஹ் ஃபிர்லீ'' எனக் கூறிக்கொள்ளல்.*
*7- முதல் அத்தஹிய்யாத்து.*
*8- அதற்காக அமருதல்.*

**கேள்வி 88: முதல் அத்தஹிய்யாத்து எது?**

*இந்நிலையில், தொழுபவர் பின்வரும் பிரார்த்தனையை ஓதிக்கொள்ள வேண்டும்.*

التَّحِيَّاتُ لله والصَّلَوَاتُ والطَّيِّبَاتُ. السَّلاَمُ عَلَيْكَ أَيُّهَا النبيُّ وَرَحْمَةُ الله وبَرَكَاتُهُ. السَّلاَمُ عَلَيْنَا وعلَى عِبَادِ الله الصَّالِحِينَ. أَشْهَدُ أَنْ لا إلهَ إلا الله وأَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ ورَسُولُهُ.

*"அத்தஹிய்யாது லில்லாஹி வஸ்ஸலாவாத்து வத்தய்யிபாது, அஸ்ஸலாமு அலைக அய்யுஹன் நபிய்யு வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு, அஸ்ஸலாமு அலைனா வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன், அஷ்ஹது அன் லா இலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹு".*

*இதன் பொருள்: எல்லாவிதமான கன்னியங்களும், தொழுகைகளும், நல்லறங்களும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே! உங்கள் மீது சாந்தியும், அல்லாஹ்வின் அருளும், பாக்கியங்களும் உண்டாகட்டும். எங்கள் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீதும் சாந்தி உண்டாகட்டும். வணக்கத்திற்குரியன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும், தூதருமாவார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்.*

**கேள்வி 89: முதல் அத்தஹிய்யாது எப்போது இடம்பெற வேண்டும்?**

*தொழுபவர், லுஹர், அஸர், மஃரிப், இஷா ஆகிய தொழுகைகளில் இரண்டாம் ரக்அத்தில், இரண்டாம் ஸுஜூதிலிருந்து எழுந்து, அமர்வதே முதல் அத்தஹிய்யாத்தாகக் கொள்ளப்படுகின்றது.*

**கேள்வி 90: இறுதி அத்தஹிய்யாது எது?**

*இறுதி அத்தஹிய்யாத்தில் தொழுபவர் பின்வரும் பிரார்த்தனையை ஓதிக்கொள்ள வேண்டும்,*

التَّحِيَّاتُ لله، والصَّلَوَاتُ والطَّيِّبَاتُ. السَّلاَمُ عَلَيْكَ أَيُّهَا النبيُّ وَرَحْمَةُ الله وبَرَكَاتُهُ. السَّلاَمُ عَلَيْنَا وعلَى عِبَادِ الله الصَّالِحِينَ. أَشْهَدُ أَنْ لا إلهَ إلا الله وأَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ ورَسُولُهُ. اللَّهمَّ صلّ عَلى مُحَمَّدٍ وَعَلى آل مُحمَّدٍ كمَا صلَّيْتَ عَلَى إبراهيم وَعَلى آلِ إبْرَاهيمَ إنَّكَ حَمِيدٌ مَجيدٌ. اللَّهمَّ بَارِكْ عَلَى مُحمَّدٍ وعَلى آلِ مُحمَّدٍ كمَا بَارَكْتَ عَلَى إبْرَاهيمَ وَعَلى آلِ إبْرَاهيمَ إنَّكَ حَمِيدٌ مَجِيدٌ.

*"அத்தஹிய்யாது லில்லாஹி, வஸ்ஸலவாத்து வத்தய்யிபாத்து, அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன் நபிய்யு வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு. அஸ்ஸலாமு அலைனா வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன். அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது*

*அன்ன முஹம்மதன் அப்துஹூ வரஸூலுஹூ. அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லைத்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்ன(க்)க ஹமீதுன் மஜீது. அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் - கமா பாரக்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்ன(க்)க ஹமீதுன் மஜீது."*

*இதன் பொருள்: எல்லாவிதமான கன்னியங்களும், தொழுகைகளும், நல்லறங்களும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே! உங்கள் மீது சாந்தியும், அல்லாஹ்வின் அருளும், பாக்கியங்களும் உண்டாகட்டும். எங்கள் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீதும் சாந்தி உண்டாகட்டும். வணக்கத்திற்குரியன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும், தூதருமாவார்கள் என்று உறுதியாக நம்புகிறேன். இறைவா! இப்றாஹீம் நபி மீதும், அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ அருள் புரிந்தது போல் முஹம்மத் ﷺ அவர்கள் மீதும், அவர்களின் குடும்பத்தார் மீதும் அருள் புரிவாயாக. நீ புகழுக்குரியவன். மகத்துவமிக்கவன். இறைவா! இப்றாஹீம் நபிக்கும், அவர்களின் குடும்பத்தினருக்கும் நீ பாக்கியம் செய்தது போல் முஹம்மத் ﷺ அவர்களுக்கும், அவர்களின் குடும்பத்தினருக்கும் பாக்கியம் செய்வாயாக. நீ புகழுக்குரியவன். மகத்துவமிக்கவன்.*

**கேள்வி 91: இறுதி அத்தஹிய்யாது எப்போது இடம்பெற வேண்டும்?**
*ஒவ்வொரு தொழுகையிலும் இறுதி ரக்அத்தில், இரண்டாம் ஸுஜூதிலிருந்து எழும் போதே இவ் இறுதி அத்தஹிய்யாத்து இடம் பெற வேண்டும்.*

**கேள்வி 92: தொழுகையின் ஸுன்னத்துக்கள் யாவை?**

*தொழுகைக்கென நிறைய ஸுன்னத்துக்கள் இருக்கின்றன. அவற்றில் சில வருமாறு:*

*1- தொழுகையை ஆரம்பிக்கும் துஆவை (துஆஉல் இஸ்திப்தாஹ்) ஓதிக்கொள்ளல்.*

*2- எழுந்து நிற்கும் போது, இடக் கையின் மீது வலக் கையின் மணிக்கட்டை வைத்தல்.*

*3- ஆரம்பத் தக்பீர், ருகூவிற்குச் செல்லல், ருகூவிலிருந்து எழல், முதல் அத்தஹிய்யாத்தை முடித்து விட்டு அடுத்த ரக்அத்தை ஆரம்பிக்க எழல் போன்ற சந்தர்ப்பங்களில் இரு கைகளையும் தோல்பட்டை அளவிற்கோ, அல்லது இரு காதுகளின் அளவிற்கோ உயர்த்தல்.*

*4- ருகூவிலும், ஸுஜூதிலும் கூறும் பிரார்த்தனைகளை ஒரு தடவைக்கு மேல் கூறல்.*

*5- இரு ஸஜ்தாக்களுக்கு மத்தியில் கூறும் பிரார்த்தனையை ஒரு தடவைக்கு மேல் கூறல்.*

*6- ருகூவின் போது தலையை முதுகுக்கு நேராக சமனாக வைத்தல்.*

*7- ஸுஜூதின் போது மேற்கையை விலா எழும்பை விட்டும், வயிறை தொடையை விட்டும் தூரப்படுத்தி வைத்தல்.*

*8- ஸுஜூதின் போது கையை பூமியை விட்டும் உயர்த்திக் கொள்ளல்.*

*9- முதல் அத்தஹிய்யாத்தின் போதும், இரு ஸுஜூதுகளுக்கு இடையில் அமரும் போதும், இரண்டு ரக்அத் தொழுகைகளில் அத்தஹிய்யாத்துக்காக அமரும் போதும், தொழுபவர் தனது வலது காலை நட்டி, இடது காலின் மீது அமர்ந்து கொள்ளல். (இந் நிலைக்கு "இப்திராஷ்" எனக் கூறப்படும்).*

*10- மூன்று ரக்அத்துக்கள் மற்றும் நான்கு ரகஅத்துக்கள் தொழுகைகளின் இறுதி அத்தஹிய்யாத்தின் போது வலது காலை நட்டி, இடது காலை வலது காலுக்குக் கீழால் இருத்தி, பிற்தட்டு நிலத்தில் படும்படி அமர்தல். (இந் நிலைக்கு "தவர்ருக்" எனக் கூறப்படும்).*

*11- இறுதி அத்தஹிய்யாத்தின் இறுதியில் எமக்கு விருப்பமான பிரார்த்தனைகளை கூறிக்கொள்ளல்.*

*12- ஃபஜ்ர் தொழுகை, ஜும்ஆத் தொழுகை, இரு பெருநாட் தொழுகை, மழை வேண்டி தொழும் தொழுகை, மஃரிப் மற்றும் இஷாத் தொழுகைகளின் ஆரம்ப இரு ரக்அத்துக்கள் முதலியவற்றில் சூறதுல் ஃபாத்திஹாவையும், மற்ற சூறாவையும் சப்தமாக ஓதல்.*

*13- ளுஹர், அஸர், மஃரிப் தொழுகையின் மூன்றாம் ரக்அத், இஷாத் தொழுகையின் இறுதி இரண்டு ரக்அத்கள் முதலியவற்றில் சூறதுல் ஃபாத்திஹாவையும், மற்ற சூறாவையும் மௌனமாக ஓதல்.*

*14- சூறதுல் ஃபாத்திஹா அல்லாத அல்குர்ஆனின் ஏனைய சூறாக்களை, சூறதுல் ஃபாத்திஹாவிற்குப் பிறகு ஓதிக் கொள்ளல்.*

**கேள்வி 93: தொழுகையின் அடிப்படைக் கடமைகள் (ருக்குன்கள்), முக்கியக் கடமைகள் (வாஜிபுகள்), ஸுன்னத்துக்கள் ஆகியவற்றுக்கிடையிலான வேறுபாடுகள் யாவை?**

*அடிப்படைக் கடமைகளில் (ருக்குன்களில்) ஏதாவது ஒன்றை மறதியாகவோ, வேண்டுமென்றோ விடுவதனால் தொழுகை முறிந்து விடும். முக்கியக் கடமைகளில் (வாஜிபுகளில்) ஏதாவது ஒன்றை வேண்டுமென்று விடுவதனால் தொழுகை முறிந்து விடும். மறதியாக விடுபட்டால் அதற்காக மறதிக்கான ஸுஜூதை செய்து நிவர்த்தி செய்திடலாம். ஆனால், ஸுன்னத்தான விடயங்களை செய்வது விரும்பத்தக்கது. அதனை விடுவதால் தொழுகையில் எவ்விதப் பாதிப்பும் இடம்பெறாது.*

**கேள்வி 94: தொழுகையை முறிக்கும் அம்சங்கள் யாவை?**

*தொழுகையை எட்டு அம்சங்கள் முறிக்கின்றன. அவை வருமாறு:*

*1- தெரிந்துகொண்டே வேண்டுமென கதைத்தல். - மறதியாகவோ, தெரியாமலோ ஒருவர் கதைத்தால் அவரின் தொழுகை முறிந்துவிடாது-*
*2- சிரித்தல்.*
*3- சாப்பிடுதல்.*
*4- பருகல்.*
*5- மர்ம உறுப்பு (அவ்ரத்) வெளிப்படல்.*
*6- கிப்லாவை விட்டும் அதிகமாக விலகுதல்.*
*7-தொழுகையை தொடர்ந்த தொழுவதில் பராமுகமாக (விளையாட்டாக) இருத்தல்.*
*8- வுழூ முறிந்து விடல்.*

**கேள்வி 95: தொழுகையின் மூலம் கிடைக்கப்பெறும் பிரதிபலன்கள் யாவை?**

*இதன் மூலம் அதிகமான பிரதிபலன்கள் கிடைக்கின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- இது உள்ளத்திற்கு அமைதியைத் தருவதோடு, மனதிற்கு இதமாகவும், அல்லாஹ்வோடு உரையாடுவதற்கான சந்தர்ப்பமாகவும் இருக்கின்றது.*

*2- இது பாவங்களை நீக்கிவிடுகின்றது.*

*3- தீய காரியங்கள் புரிவதை விட்டும் ஓர் முஸ்லிமைத் தடுக்கின்றது.*

*4- கஷ்டங்கள், தீங்குகள் போன்றவற்றிலிருந்து ஓர் முஸ்லிமை இது பாதுகாக்கின்றது. அல்லாஹ்வின் பாதுகாப்பும், அரவணைப்பும் எப்போதும் அவனுக்கு இருந்துகொண்டே இருக்கும்.*

## ஸக்காத்

**கேள்வி 96:** ஸக்காத் என்றால் என்ன?

*குறிப்பிட்ட நேரத்தில், குறிப்பிட்ட சிலருக்கு தமது சொத்துக்களில் குறிப்பிட்ட ஓர் தொகையை வழங்குவது ஸக்காத் எனப்படும்.*

**கேள்வி 97:** ஸக்காத் கட்டாயக் கடமை என்பதற்கு ஏதும் ஆதாரங்கள் உண்டா?

*ஆம், அல்லாஹ் கூறுகிறான்,* ***"தொழுகையை நிலை நாட்டுங்கள்! ஸகாத்தையும் கொடுங்கள்!"*** *(அல்குர்ஆன் 02:43)*

**கேள்வி 98:** ஸக்காத் கடமையாகக் கூடிய சொத்துக்கள் யாவை?

*ஸக்காத் கடமையாகக் கூடிய சொத்துக்கள் ஐந்து இருக்கின்றன. அவை:*

*1- கால்நடைகள்: ஆடு, மாடு, ஒட்டகம்.*
*2- பூமியிலிருந்து பெறப்படும் தானியங்கள், பழவகைகள்.*
*3- நாணயங்கள்: தங்கம், வெள்ளி, அதற்கு ஒப்பான ஏனைய தாள் நாணயங்கள்.*
*4- வியாபாரப் பொருட்கள்.*
*5- கனிமங்கள், புதையல்கள்.*

**கேள்வி 99:** ஸக்காத் கடமையாகுவதற்கான நிபந்தனைகள் யாவை?

*இதற்கு நான்கு நிபந்தனைகள் இருக்கின்றன. அவை:*

*1- முஸ்லிமாக இருத்தல்.*
*2- சுதந்திரமாக இருத்தல்.*
*3- ஸக்காத் கொடுப்பதற்குத் தேவையான அளவை (நிஸாப்) தனது சொத்தில் அடைந்திருத்தல்.*
*4- அவ் அளவுக்கு ஒரு வருடம் பூர்த்தியாகி இருத்தல்.*

**கேள்வி 100:** ஸக்காத் பெறத் தகுதியானவர்கள் யாவர்?

*ஸக்காத் பெற எட்டு குழுவினர் தகுதி பெறுகின்றனர். அவர்களை அல்லாஹ் பின்வருமாறு குறிப்பிடுகிறான்,* "***யாசிப்போருக்கும் (பகீர்கள்), ஏழைகளுக்கும் (மிஸ்கீன்கள்), அதை வசூலிப்போருக்கும், இஸ்லாத்தின் பக்கம் ஆசையுள்ளவர்கள், அடிமை(களை விடுதலை செய்வதற்)கும், கடன்பட்டோருக்கும், அல்லாஹ்வின் பாதையில் போர் செய்வோருக்கும், நாடோடிகளுக்கும் (இப்னு ஸபீல்) தர்மங்கள் உரியனவாகும். இது அல்லாஹ் விதித்த கடமை. அல்லாஹ் அறிந்தவன்; ஞானமிக்கவன்.***" *(அல்குர்ஆன் 09:60)*

۞۞۞۞

**கேள்வி 101:** ஸக்காத்தின் மூலம் கிடைக்கபெறும் பிரதிபலன்கள் யாவை?

*இதன் மூலம் அதிக பிரதிபலன்கள் கிடைக்கின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- ஒருவரைப் பொறுப்பேற்றல், ஒருவருக்கொருவர் உதவி ஒத்தாசையாக இருத்தல், முஸ்லிம்களில் ஏழைகள், பணக்காரர்களுக்கு மத்தியில் பரஸ்பரம் ஏற்படல் போன்ற நல்ல நிகழ்வுகள் இதன் மூலம் இடம்பெறுகின்றன.*

*2- கஞ்சத்தனம், உலோபித்தனம் போன்றவற்றிலிருந்து உள்ளம் தூய்மையடைகின்றது.*

*3- இதன் மூலம் செல்வச் செழிப்பு ஏற்பட்டு, சொத்துக்கள் அதிகரிக்கின்றன.*

۞۞۞۞

## நோன்பு

**கேள்வி 102: நோன்பு என்பதன் அர்த்தம் யாது?**

*சூரியன் உதித்ததிலிருந்து மறையும் வரை உண்ணாமலும், பருகாமலும், நோன்பை முறிக்கும் ஏனைய காரியங்களில் ஈடுபடாமலும் இருப்பதையே இது குறிக்கின்றது.*

**கேள்வி 103: ரமழான் மாத நோன்பு கட்டாயமானது என்பதற்கு ஏதும் ஆதாரங்கள் உண்டா?**

*ஆம், அல்லாஹ் கூறுகிறான்,* ***"நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் (இறைவனை) அஞ்சுவதற்காக உங்களுக்கு முன் சென்றோர் மீது கடமையாக்கப்பட்டது போல் உங்களுக்கும் குறிப்பிட்ட நாட்களில் நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது."*** *(அல்குர்ஆன் 02:183)*

**கேள்வி 104: நோன்பு கடமையாவதற்கான நிபந்தனைகள் யாவை?**

*இதற்கு ஆறு நிபந்தனைகள் இருக்கின்றன. அவை:*

*1- முஸ்லிமாக இருத்தல்.*
*2- பருவ வயதை அடைந்திருத்தல்.*
*3- புத்தியுள்ளவராக இருத்தல்.*
*4- ஆரோக்கியத்துடன் இருத்தல்.*
*5- ஊரில் இருத்தல்.*
*6- மாதவிடாய், மகப்பேற்று இரத்தம் போன்றவற்றிலிருந்து சுத்தமாக இருத்தல்.*

**கேள்வி 105: ரமழான் மாத நோன்பை நோற்காமல் இருக்க, ஆகுமான, தகுதந்த காரணங்கள் யாவை?**

*ரமழான் மாத நோன்பை நோற்காமல் விட்டுவிடுவதற்கு, ஆகுமான தகுந்த நான்கு காரணங்கள் இருக்கின்றன. அவை:*

*1- நோன்பு நோற்பதற்கு சிரமமாக இருக்கும் நோய், அல்லது வயோதிபம்.*
*2- பிரயாணம்.*
*3- மாதவிடாயும், மகப்பேற்று இரத்தமும்.*
*4- கர்ப்பம், அல்லது பாலூட்டல்.*

**கேள்வி 106: நோன்பை முறிக்கும் காரியங்கள் யாவை?**

*நோன்பை பின்வரும் ஏழு விடயங்கள் முறிக்கின்றன. அவை:*

*1- உடலுறவு.*
*2- இந்திரியம் வெளியேறுதல்.*
*3- உண்ணல் மற்றும் பருகல்.*
*4- உண்ணல் பருகல் என்னும் பெயரில் அமைந்த காரியங்கள். - சத்தூசி ஏற்றல்-*
*5- இரத்தம் குத்தி எடுத்தல்.*
*6- வேண்டுமென்று வாந்தியெடுத்தல்.*
*7- மாதவிடாய், மகப்பேற்று இரத்தம் போன்றன வெளிப்படல்.*

**கேள்வி 107: நோன்பை முறிக்கும் காரியங்கள் நிகழும் போது, அவை நோன்பை முறித்து விடும் என்பதற்கான நிபந்தனைகள் யாவை?**

*இதற்கு மூன்று நிபந்தனைகள் இருக்கின்றன. அவை:*

*1- நோன்பு நோற்றவர் அதன் சட்டத்தையும், நேரத்தையும் அறிந்திருத்தல்.*
*2- அவர் நினைவாற்றல் உள்ளவராக இருத்தல்.*

*3- தேர்வு செய்பவராக இருத்தல்.*

**கேள்வி 108: நோன்பின் மூலம் ஏற்படும் பிரதிபலன்கள் யாவை?**

*இதன் மூலம் அதிக பிரதிபலன்கள் கிடைக்கின்றன. அவற்றில் முக்கியமானவை வருமாறு:*

*1- தன்னை, பொறுமை, சகிப்புத் தன்மை ஆகிய நற்குணங்களுக்கு பழக்கிக் கொள்ள ஓர் சந்தர்ப்பமாக இது இருக்கின்றது.*

*2- அல்லாஹ் மனிதர்களுக்கு வழங்கியுள்ள உண்ணல், பருகல் போன்ற அருட்கொடைகளை நினைவு கூற வைக்கின்றது.*

*3- ஏழை, எளியோரின் தேவைகளை அறிந்து, அவர்களுக்கு உதவிடும் மனப்பான்மையைப் பெற்றுத் தருகின்றது.*

*4- உடலின் ஆரோக்கியத்தையும், அதன் சீரான அமைப்பையும் பேணிக்காக்கின்றது.*

## ஹஜ்

**கேள்வி 109:** ஹஜ் என்பதன் அர்த்தம் யாது?

*குறிப்பிட்ட காலத்தில், குறிப்பிட்ட சில செயல்களை செய்வதற்காக மக்கா நகரை நோக்கிச் செல்லும் பயணம் என்பதே இதன் அர்த்தமாகும்.*

**கேள்வி 110:** ஹஜ் கட்டாயக் கடமை என்பதற்கு ஏதும் ஆதாரம் உண்டா?

*ஆம், அல்லாஹ் கூறுகிறான், "**அந்த ஆலயத்தில் அல்லாஹ்வுக்காக ஹஜ் செய்வது, சென்று வர சக்தி பெற்ற மனிதர்களுக்குக் கடமை.**" (அல்குர்ஆன் 03:97)*

**கேள்வி 111:** ஹஜ்ஜின் நிபந்தனைகள் யாவை?

*இதற்கு ஐந்து நிபந்தனைகள் இருக்கின்றன. அவை:*

*1- முஸ்லிமாக இருத்தல்.*
*2- புத்தியுள்ளவராக இருத்தல்.*
*3- பருவ வயதை அடைந்திருத்தல்.*
*4- சுதந்திரமாக இருத்தல்.*
*5- பணம் மற்றும் உடல் சார்ந்த பலம் இருத்தல்.*

**கேள்வி 112:** ஹஜ்ஜின் வகைகள் யாவை?

*இதற்கு மூன்று வகைகள் இருக்கின்றன. அவை:*

*1- தமத்துஃ: ஹஜ், உம்ரா இரண்டையும் நிறைவேற்ற எண்ணம் கொண்டு, சிறிது இடைவெளி விட்டு உம்ராவை நிறைவேற்றிய பின் ஹஜ்ஜை நிறைவேற்றல்.*

*2- கிரான்: ஹஜ்ஜையும், உம்ராவையும் ஒரே தடவையில் நிறைவேற்ற எண்ணுதல்.*

*3- இப்ராத்: ஹஜ்ஜை மாத்திரம் நிறைவேற்ற எண்ணுதல்.*

**கேள்வி 113:** ஹஜ்ஜின் அடிப்படைக் கடமைகள் (ருக்குன்கள்) யாவை?

*இதற்கு நான்கு அடிப்படைக் கடமைகள் இருக்கின்றன. அவை:*

*1- ஹஜ்ஜை நிறைவேற்ற எண்ணுதல்-நிய்யத்து வைத்தல்- (இஹ்ராம்).*
*2- அரபாவில் இருத்தல்.*
*3- கஃபாவை வலம் வருதல் (தவாஃபுல் ஹஜ்).*
*4- ஸபா, மர்வா மலைகளுக்கு நடுவில் தொங்கோட்டம் ஓடுதல்.*

۞۞۞۞

**கேள்வி 114: ஹஜ்ஜின் முக்கியக் கடமைகள் (வாஜிபுகள்) யாவை?**

*இதற்கு ஏழு முக்கியக் கடமைகள் இருக்கின்றன. அவை:*

*1- மீக்காத்தில் (ஹஜ்ஜின் எல்லையில்) வைத்து இஹ்ராம் கட்டுதல்.*
*2- பகல் வேளையில் அரபாவுக்குச் செல்பவர் மஃரிப் வரை அங்கு இருத்தல்.*
*3- துல் ஹஜ் பத்தாம் நாள் இரவு முஸ்தலிபாவில் தங்குதல்.*
*4- அய்யாமுத் தஷ்ரீக் நாட்களில் (துல்ஹஜ் 11,12,13 ஆகிய நாட்கள்) மினாவில் தங்குதல்.*
*5- ஒழுங்கு முறைப்படி ஜமராத்தில் கல்லெறிதல்.*
*6- தலையை வழித்தல், அல்லது முடிகளைக் குறைத்தல்.*
*7- மாதவிடாய், மகப்பேற்று இரத்தம் அல்லாதோர் பிரியாவிடை தவாஃபை (தவாஃபுல் வதாஃ) நிறைவேற்றல்.*

۞۞۞۞

**கேள்வி 115: ஹஜ்ஜின் ஸுன்னத்துக்கள் யாவை?**

*இதற்கு அதிகமான ஸுன்னத்துக்கள் இருக்கின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- ஆடையை அணியும் முன், குளித்து, வாசனைத் திறவியங்களை உடம்பில் பூசிக்கொள்ளல்.*

*2- இப்ராத் மற்றும் கிரான் செய்பவர்கள் தவாஃபுல் குதூமை (மக்காவிற்குள் நுழைந்ததற்காக வேண்டி செய்யும் தவாஃப்) நிறைவேற்றிக் கொள்ளல்.*

*3- தவாஃபுல் குதூமின் போது முதல் மூன்று சுற்றுக்களிலும் சற்று வேகமாக நடந்து செய்திடுதல்.*

*4- தவாஃவுல் குதூமின் போது வெள்ளாடையின் மேல் அங்கியின் நடுப்பகுதியைத் தனது வலது அக்குழுக்குக் கீழால் போட்டு, இரு ஓரங்களையும் இடது தோல்புஜத்தின் மீது போட்டுக்கொண்டு, வலது தோல் புஜத்தை வெளியில் தெரியும் படி செய்தல்.*

*5- தவாஃபை நிறைவேற்றியதன் பின்னர் இரண்டு ரக்அத்துக்கள் தொழல்.*

*6- பிறை 8 ஆம் தின இரவில் மினாவில் தங்குதல்.*

*7- ஹஜ் செய்வதற்கு எண்ணியதிலிருந்து, கல்லெறியும் வரை தல்பியாவை மொழிந்த வண்ணமிருத்தல்.*

*8- அரபா தினத்தன்று லுஹர் மற்றும் அஸர் தொழுகைகளை லுஹரோடு சேர்த்து அரபாவில் வைத்துத் தொழல், அவ்வாறே மஃரிப் மற்றும் இஷாத் தொழுகைகளை இஷாத் தொழுகையோடு சேர்த்து முஸ்தலிபாவில் தொழல்.*

**கேள்வி 116: ஹஜ்ஜின் அடிப்படைக் கடமைகள் (ருக்குன்கள்), முக்கியக் கடமைகள் (வாஜிபாத்துக்கள்), ஸுன்னத்துக்கள் முதிலயவற்றுக்கிடையில் இருக்கும் வேறுபாடுகள் யாவை?**

*அடிப்படைக் கடமை (ருக்குன்கள்) இன்றி ஹஜ் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. முக்கியக் கடமை (வாஜிபு)களில் ஏதும் விடுபட்டால் அதற்காக அறுத்துப் பலியிட வேண்டும். ஸுன்னத்தான காரியங்களை நிறைவேற்றுவது வரவேற்கத்தக்கது. அதனை விடுவதால் எவ்வித பாதிப்பும் ஹஜ்ஜிற்கு ஏற்படாது.*

**கேள்வி 117: ஹஜ் மற்றும் உம்ராக் கடமையை நிறைவேற்ற எண்ணியவர் செய்யக்கூடாத காரியங்கள் யாவை?**

*ஹஜ் மற்றும் உம்ராவை நிறைவேற்ற எண்ணிய ஒருவருக்கு, பின்வரும் மூன்று பிரிவுகளில் அமைந்த சில விடயங்கள் செய்யக்கூடாது என தடுக்கப்படுகின்றன.*

*அ) ஆண்கள், பெண்கள் இரு பாலாருக்கும் தடுக்கப்படும் காரியங்கள்:*

*1- தலை முடியை வழிப்பதன் மூலமோ, வேறு வகையிலோ நீக்குதல்.*
*2- நகங்களை வெட்டுதல்.*
*3- வாசணைத் திறவியங்களைப் பயன்படுத்தல்.*
*4- திருமண ஒப்பந்தகளை மேற்கொள்ளல்.*
*5- கனவன் மனைவியை இச்சையோடு உரசுதல்.*
*6- உடலுறவு கொள்ளல்.*
*7- வேட்டையாடுதல்.*

*ஆ) ஆண்களுக்கு மாத்திரம் தடுக்கப்படும் காரியங்கள்:*
*1- தலையை மறைத்தல்.*
*2- தைத்த ஆடைகளை அணிதல்.*

*இ) பெண்களுக்கு மாத்திரம் தடுக்கப்படும் காரியங்கள்:*
*1- நிகாப், புர்கா போன்றவற்றால் முகத்தை மறைத்தல்.*
*2- கையுறை அணிதல்.*

**கேள்வி 118: ஹஜ்ஜின் மூலம் கிடைக்கப்பெறும் பிரதிபலன்கள் யாவை?**

*இதன் மூலம் அதிக நல்லரங்கள் கிடைக்கின்றன. அவற்றில் முக்கியமானவைகள் வருமாறு:*

*1- உலகில் பல பாகங்களிலிருந்தும் முஸ்லிம்கள் அங்கு ஒன்று திரள்வதால், ஒருவருக்கொருவர் அன்பும், பாசமும், அறிமுகங்களும் ஏற்படுகின்றன.*

*2- ஒரே இடத்தில், ஒரே காலத்தில், ஒரே ஆடையுடன், ஏழை பணக்காரன், அறபி, அறபியல்லாதவன், வெள்ளையன் கறுப்பன் என்ற எவ்வித வேற்றுமைகளும் இன்றி, ஒன்று சேர்வதால், முஸ்லிம்கள் அனைவரும் ஒரே சமூகம் என்ற எண்ணம் மேலோங்குகின்றது.*

*3- மக்கள் பெருவெள்ளமாக திரண்டிருப்பதானது, அல்லாஹ்வுக்கு முன்னால் அவனது அடியார்கள் ஒன்று திரளும் நாளான மறுமை நாளை நினைவு கூர்கின்றது.*

## அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் கொள்கைகள்

**கேள்வி 119: முஸ்லிம்களில் நரகை விட்டும் பாதுகாப்புப் பெறும் கூட்டத்தினர் யாவர்?**

*நரகை விட்டும் பாதுகாப்புப் பெறும் கூட்டத்தினர் அஹ்லுஸ்ஸுனா வல் ஜமாத்தினர் ஆவார்கள்.*

✡✡✡✡

**கேள்வி 120: அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினர் என்போர் யார்?**

*நபி ﷺ அவர்களின் சொல், செயல், நம்பிக்கை சார்ந்த வெளிப்படையான, உள்ரங்கமான அனைத்து விடயங்களையும் அச்சொட்டாகப் பின்பற்றுபவர்களே அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினர் ஆவார்கள். நபி ﷺ அவர்கள் கொண்டு வந்த, தமக்கு முன்சென்றோர் செய்த சரியான இஸ்லாமிய வாழ்கை நெறியை இவர்கள் பின்பற்றுகின்றனர். இதனாலே இவர்கள் "ஸலபிகள்" எனவும் அழைக்கப்படுகின்றனர்.*

✡✡✡✡

**கேள்வி 121: அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினர் என இவர்களுக்குப் பெயர் வரக் காரணம் யாது?**

*'அஹ்லுஸ்ஸுன்னா' (ஸுன்னாவைப் பின்பற்றுபவர்கள்) என்ற பெயர், இவர்கள் நபி ﷺ அவர்களின் நேரிய வழியைப் பின்பற்றுவதால் வைக்கப்பட்டது. 'அஹ்லுல் ஜமாஅத்' (கூட்டாக இருப்பவர்கள்) என்ற பெயர், ஸுன்னாவைப் பின்பற்றுவதில் ஒன்று சேர்ந்தவர்கள் என்ற அடிப்படையில் வைக்கப்பட்டது.*

✡✡✡✡

**கேள்வி 122: 'ஸலபுகள்' என்று அழைக்கப்படுவதற்கான காரணம் யாது?**
*இவர்கள் தமக்கு முன்னிருந்த இஸ்லாமிய தலைசிறந்த மேதைகள் அல்குர்ஆனையும், ஹதீஸையும் பின்பற்றிய வழியில் பயணிப்பவர்கள். அதற்காக வேண்டி அழைப்புப் பணி புரிபவர்கள். அதன் படி நடப்பவர்கள். இதனாலேயே இவர்கள் ஸலபுகள் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றனர்.*

✡✡✡✡

**கேள்வி 123: அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினர் நரகை விட்டும் பாதுகாப்புப் பெற்றவர்கள் என்பதற்கான ஆதாரம் யாது?**

*நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,* ***"'யஹூதிகள் எழுபத்தியொரு கூட்டமாகப் பிரிந்தார்கள். கிறிஸ்தவர்கள் எழுபத்திரண்டு கூட்டமாகப் பிரிந்தனர். இந்த சமுதாயம் எழுபத்தி மூன்று கூட்டங்களாகப் பிரிவார்கள். ஒரு கூட்டத்தினரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் நரகிலே இருப்பார்கள்'. அப்போது, 'அவர்கள் யார் அல்லாஹ்வின் தூதரே?' என வினவப்பட்டது.***

***அதற்கு நபி ﷺ அவர்கள், 'நானும், எனது தோழர்களும் இன்று இருக்கும் இதே நிலையில் இருப்பவர்கள்' எனக் கூறினார்கள்."*** *இன்னொரு அறிவிப்பில் 'கூட்டத்தினர்' என அறிவிக்கப்பட்டுள்ளது. (ஆதாரம்:திர்மிதி 2641, அபூதாவுத் 4596, இப்னு மாஜா 3996)*

۞۞۞۞

**கேள்வி 124: அல்லாஹ்வின் உயர்வு (உலுவ்வு) மற்றும் நிலைபெறல் (இஸ்திவாஃ) முதலிய பண்புகளை நிருவுவதில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*அல்லாஹ்வின் உயர்வு மற்றும் அவனின் நிலைபெறல் ஆகிய பண்புகளை ஸஹாபாக்களும், முன் சென்ற அல்லாஹ்வின் தூதர்களும் நிருவியது போன்றே இவர்களும் நிருவுகின்றனர். அல்லாஹ் தனது அனைத்துப் படைப்பினங்களுக்கும் மேலால் வானத்தில் உள்ளான். அவன் தனது மகத்துவத்திற்கும், தனக்கு தகுந்தாற் போலும் தனது சிம்மாசனத்தில் அமர்ந்துள்ளான். அல்லாஹ்வின் பண்புகளோடு அவனது படைப்புக்கள் என்றும் ஒப்பாக முடியாது.*

۞۞۞۞

**கேள்வி 125: அல்லாஹ்வின் உயர்வை (உலுவ்வு) உறுதிப்படுத்துவதற்கு அல்குர்ஆனில் உள்ள ஆதாரங்கள் யாது?**

*ஆம், அதிகமான அல்குர்ஆன் வசனங்கள் இருக்கின்றன. அல்லாஹ் கூறுகிறான்,* ***"வானத்தில் உள்ளவன் பூமியில் உங்களைப் புதையச் செய்வதில் பயமற்று இருக்கிறீர்களா?"*** *(அல்குர்ஆன் 67:16), மேலும்,* ***"மிக உயர்ந்த உமது இறைவனின் பெயரைத் துதிப்பீராக!"*** *(அல்குர்ஆன் 87:01).*

۞۞۞۞

**கேள்வி 126: அல்லாஹ்வின் உயர்வை (உலுவ்வு) உறுதிப்படுத்துவதற்கு ஸுன்னாவில் இருந்து ஓர் ஆதாரத்தைக் குறிப்பிடுக?**

***ஓர் அடிமைப் பெண்ணிடம் 'அல்லாஹ் எங்கே இருக்கிறான்?' என நபி ﷺ அவர்கள் வினவினார்கள். அதற்கு அவள், 'வானத்தில் இருக்கிறான்' என பதிலளித்தாள். பின்னர், 'நான் யார்?' என நபி ﷺ அவர்கள் வினவ, 'நீங்கள் அல்லாஹ்வின் தூதர்' என பதிலளித்தாள். இதைக் கேட்ட நபி ﷺ அவர்கள், 'இவளை உரிமையிடுங்கள். இவள் இறை விசுவாசியாக (முஃமினாக) இருக்கிறாள்' எனக் கூறினார்கள்.*** *(ஆதாரம் :முஸ்லிம் 537)*

۞۞۞۞

**கேள்வி 127: அல்லாஹ்வின் நிலைபெறலை (இஸ்திவாஃ) உறுதிப்படுத்துவதற்கான ஆதாரங்கள் யாவை?**

*அல்லாஹ் கூறுகிறான்,* ***"அளவற்ற அருளாளன் அர்ஷின் மீது நிலைபெற்றுவிட்டான்."*** *(அல்குர்ஆன் 20:05), மேலும்,* ***"பின்னர் அர்ஷின் மீது நிலைபெற்றுவிட்டான்"*** *(அல்குர்ஆன்*

*07:54). இதே வாசகம் அல்குர்ஆனில் ஆறு இடங்களில் இடம்பெற்றுள்ளது. (அல்குர்ஆன் 10:03, 13:02, 25:59, 32:04, 57:04)*

**கேள்வி 128: நிலைபெறல் (இஸ்திவாஃ) என்பதன் அர்த்தம் யாது?**

*இதற்கு உயர்வு என்ற அர்த்தமும் உண்டு. சிம்மாசனத்தின் மீது நிலைகொண்டு விட்டான் என்றும் பொருள் கொள்ளலாம். இவ்வாறே அறபு மொழியில் இதற்கு பொருள் கொள்ளப்படும். ஆனால் இதன் முறைமை தான் எவருக்கும் தெரியாது. இமாம் மாலிக் ﵀ அவர்கள் கூறுகின்றார்கள்,* ***"சிம்மாசனத்தின் மீது நிலைகொள்ளல் என்பது அறிய முடியுமான விடயமாகும். அதன் முறைமை அறிய முடியாத விடயமாகும். அதனை நம்புவது கட்டாயமாகும். அதனைப் பற்றி வினா எழுப்புவது பித்அத்தாகும்"***. *இதுவே அல்லாஹ்வின் பண்புகள் அனைத்திற்கும் நிருவப்படும் பொது விதியாக இருக்கின்றது. அல்லாஹ்வின் பண்புகளின் பொருள் அனைவராலும் விளங்கிக் கொள்ள முடியும். ஆனால் அதன் முறைமை எவராலும் அறிந்திட முடியாது.*

**கேள்வி 129: அல்குர்ஆன் தொடர்பான அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*அல்குர்ஆனின் எழுத்துக்களும், அதன் பொருள்களும் அல்லாஹ்வின் வார்த்தைகளாகும். இது படைக்கப்படாமல் இறக்கப்பட்டது. அல்லாஹ்விடமிருந்து வந்த இவ் வேதம் அவனிடமே திரும்பவும் சென்று விடும். அல்குர்ஆனில் உள்ள வார்த்தைகளை அல்லாஹ் யதார்த்தமாகவே பேசியுள்ளான். அதனை ஜிப்ரீல் ﵇ அவர்களுக்கு வழங்கி, முஹம்மத் ﷺ அவர்களின் உள்ளத்தில் இறக்கி வைத்தான் என்பதுவே அல்குர்ஆன் தொடர்பில் இவர்களின் நிலைப்பாடாகும்.*

**கேள்வி 130: அல்குர்ஆன் அல்லாஹ்வின் வார்த்தை என்பதற்கான ஆதாரம் யாது?**

*அல்லாஹ் கூறுகிறான்,* ***"இணை கற்பிப்போரில் யாரும் உம்மிடம் அடைக்கலம் தேடினால் அல்லாஹ்வின் வார்த்தைகளைச் செவியுறுவதற்காக அவருக்கு அடைக்கலம் அளிப்பீராக!"*** *(அல்குர்ஆன் 09:06). இங்கு அல்லாஹ்வின் வார்த்தைகள் என்ற வாசகம் அல்குர்ஆனையே குறிப்பிடுகின்றது.*

**கேள்வி 131: அல்குர்ஆன் படைக்கப்படாமல் இறக்கப்பட்டது என்பதற்கான ஆதாரம் யாது?**

*அல்குர்ஆன் இறக்கப்பட்டது என்பதை அல்லாஹ் பின்வருமாறு குறிப்பிடுகிறான்,* ***"(பொய்யையும் உண்மையையும்) பிரித்துக் காட்டும் வழி முறையை அகிலத்தாருக்கு எச்சரிக்கை செய்யக் கூடியதாக தனது அடியார் மீது இறக்கியவன் பாக்கியமானவன்."*** *(அல்குர்ஆன் 25:01).*

*அல்குர்ஆன் படைக்கப்படவில்லை என்பதை அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான், **"கவனத்தில் கொள்க! படைத்தலும், கட்டளையும் அவனுக்கே உரியன."** (அல்குர்ஆன் 07:54). கட்டளையை அல்லாஹ் இங்கு வேறுபிரித்துக் கூறுவதன் மூலம், அது படைப்பில் சேராது என்பது தெளிவாகின்றது. அல்குர்ஆன் அல்லாஹ்வின் கட்டளையாகும். இதனை பின்வரும் வசனம் தெளிவுபடுத்துகின்றது, **"இவ்வாறே நமது கட்டளையில் உயிரோட்டமானதை உமக்கு அறிவித்தோம்."** (அல்குர்ஆன் 42:52). அல்லாஹ்வின் பேச்சு என்பது அவனது பண்புகளில் ஒன்றாகும். அல்லாஹ்வின் பண்புகள் என்றுமே படைக்கப்பட முடியாது.*

**கேள்வி 132: மறுமையில் அல்லாஹ்வைப் பார்க்கும் விடயத்தில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*இறை விசுவாசிகள் மறுமை நாளிலும், சுவனத்திலும் அல்லாஹ்வை வெற்றுக் கண்களால் நேரடியாகக் காண்பார்கள் என்பதே இவர்களின் நிலைப்பாடாகும்.*

**கேள்வி 133: மறுமை நாளில் இறை விசுவாசிகள் அல்லாஹ்வைக் காண்பார்கள் என்பதற்கான ஆதாரம் யாது?**

*அல்லாஹ் கூறுகிறான், **"அந்நாளில் சில முகங்கள் மலர்ந்து இருக்கும். தமது இறைவனைப் பார்த்துக் கொண்டிருக்கும்."** (அல்குர்ஆன் 75:22-23), மேலும், **"நன்மை செய்தோருக்கு நன்மையும், (அதை விட) அதிகமாகவும் உண்டு."** (அல்குர்ஆன் 10:26). ஹதீஸில் இடம்பெற்றுள்ளவாறு, நன்மை என்பது சுவனத்தையும், அதிகம் என்பது அல்லாஹ்வின் திருமுகத்தைக் காண்பதையும் குறிக்கின்றது. (ஆதாரம் :முஸ்லிம் 181).*

**கேள்வி 134: நம்பிக்கை (ஈமான்) கொள்வதில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*உள்ளத்தால் ஏற்று, வாயால் மொழிந்து, உடல் உறுப்புக்களால் செயற்படுத்துவதையே இவர்கள் இஸ்லாமிய நம்பிக்கை (ஈமான்) எனக் கூறுகின்றனர். வணக்க வழிபாடுகள் செய்வதன் மூலம் இது அதிகரிக்கின்றது. பாவ காரியங்களை செய்வதன் மூலம் குறைகின்றது. இதுவே இஸ்லாமிய நம்பிக்கை சார்ந்த இவர்களின் நிலைப்பாடாகும்.*

**கேள்வி 135: சொல்லும், செயலும் இஸ்லாமிய நம்பிக்கையை (ஈமானை) சார்ந்தது என்பதற்கான ஆதாரம் யாது?**

*நபி ﷺ அவர்கள் கூறினார்கள், **"இஸ்லாமிய நம்பிக்கை (ஈமான்) என்பது எழுபதுக்கும் மேற்பட்ட கிளைகளைக் கொண்டுள்ளது. அதில் மிகவும் சிறந்தது 'லா இலாஹ இல்லல்லாஹ்' என்று கூறுவதாகும். அதில் மிகவும் கீழ் நிலையில் உள்ளது பதையில் நோவினை ஏற்படுத்தும் விடயங்களை நீக்குவதாகும். வெட்கம் இஸ்லாமிய நம்பிக்கையின்(ஈமானின்) ஒரு கிளையாகும்"** (ஆதாரம் :புஹாரி 09, முஸ்லிம் 35).*

۞۞۞۞

**கேள்வி 136: இஸ்லாமிய நம்பிக்கை (ஈமானை) அதிகரிக்கும், குறைவடையும் என்பதற்கான ஆதாரம் யாது?**

*அல்லாஹ் கூறுகிறான், **"நம்பிக்கை கொண்டோர் நம்பிக்கையை அதிகமாக்கிக் கொள்ளவும் (இவ்வாறு அமைத்தோம்)"** (அல்குர்ஆன் 74:31). நம்பிக்கை அதிகரிக்கும் என்பதற்கான ஆதாரம் அது குறையும் என்பதற்கும் ஆதாரமாக அமையும்.*

۞۞۞۞

**கேள்வி 137: ஜமாஅத்தோடு ஒன்றியிருக்க வேண்டுமென்பதில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது? ஆதாரத்துடன் குறிப்பிடுக.**

*முஸ்லிம்கள் அனைவரும் ஒரே கூட்டமாகவே இருக்க வேண்டும். என்றும் அவர்கள் பிரிந்து விடக் கூடாது. இது கட்டாயக் கடமை என இவர்கள் நம்புகின்றனர். அல்லாஹ் கூறுகிறான், **"அல்லாஹ்வின் கயிற்றை (அல்குர்ஆனை) அனைவரும் சேர்ந்து பிடித்துக் கொள்ளுங்கள்"** (அல்குர்ஆன் 03:103)*

۞۞۞۞

**கேள்வி 138: தலைவர்களுக்குக் கட்டுப்பட்டு நடந்திட வேண்டுமென்பதில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது? ஆதாரத்துடன் குறிப்பிடுக.**

*தலைவர்கள் கெட்டவர்களாக இருப்பினும் நல்ல விடயங்களில் அவர்களுக்குக் கட்டுப்பட்டு நடப்பது கட்டாயக் கடமை என்பதே இவர்களின் நிலைப்பாடாகும். நபி ﷺ அவர்கள் கூறினார்கள், **"விருப்பிலும், வெறுப்பிலும் ஓர் முஸ்லிம், தலைவருக்குக் கட்டுப்படுதல் அவசியமாகும். அவர் பாவமான காரியத்தைச் செய்வதற்கு ஏவினால், அப்போது அவர்களுக்குக் கட்டுப்படுவது அவசியமாகாது"** (ஆதாரம் :புஹாரி 7144, முஸ்லிம் 1839).*

۞۞۞۞

**கேள்வி 139: பெரும் பாவங்கள் புரிவோரின் விடயத்தில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது? ஆதாரத்துடன் குறிப்பிடுக.**

*பெரும் பாவங்கள் புரிபவர்கள் இஸ்லாத்தை விட்டும் வெளியேறிடவோ, நரகில் நிரந்தரமாக தங்கிடவோ மாட்டார்கள். அவரின் விடயத்தை அல்லாஹ்வே பொறுப்பேற்பான். தான் நாடினால் அவரின் பாவத்திற்கேற்ப தண்டிப்பான். தான் நாடினால் மன்னித்திடுவான் என்பதே இவர்களின் நிலைப்பாடாகும். அல்லாஹ் கூறுகிறான்,* ***"தனக்கு இணை கற்பிக்கப்படுவதை அல்லாஹ் மன்னிக்க மாட்டான். அதற்குக் கீழ் நிலையில் உள்ள (பாவத்)தை, தான் நாடியோருக்கு மன்னிப்பான்."*** *(அல்குர்ஆன் 04:48).*

۞۞۞۞

**கேள்வி 140: ஓர் முஸ்லிமை இறை நிராகரிப்பாளர் (காபிர்) எனக் கூறுவதன் சட்டம் யாது? அதற்கான ஆதாரத்தைக் குறிப்பிடுக.**

*ஓர் முஸ்லிமை இறை நிராகரிப்பாளன் (காபிர்) எனக் கூறுவது தடுக்கப்பட்டதாகும். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,* ***"யார் ஓர் முஸ்லிமை இறை நிராகரிப்பாளன் (காபிர்) எனக் கூறுகிறானோ, அவன் அவனைக் கொண்றவன் போலாவான்"*** *(ஆதாரம் :புஹாரி 6105).*

۞۞۞۞

**கேள்வி 141: ஸஹாபாக்கள் விடயத்தில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*ஸஹாபாக்கள் மீது குரோதம், கோபம், எதிர்ப்பு போன்ற எதையும் உள்ளத்தளவில் வைத்துக்கொள்ள மாட்டார்கள். குத்திக்காட்டல், ஏசுதல் போன்ற எதையும் வாயளவில் கூட பேச மாட்டார்கள். அவர்கள் மீது பாசமாய் இருப்பார்கள். அவர்களை பொருந்திக்கொண்டு, அவர்களை நல்ல முறையில் பின்பற்றுவார்கள். அல்லாஹ் கூறிய பிரகாரம் அவர்களுக்காகப் பிரார்த்திப்பார்கள்.* ***"'எங்கள் இறைவா! எங்களையும், நம்பிக்கையுடன் (ஈமானுடன்) எங்களை முந்தி விட்ட எங்கள் சகோதரர்களையும் மன்னிப்பாயாக!"*** *(அல்குர்ஆன் 59:10).*

۞۞۞۞

**கேள்வி 142: நபி ﷺ அவர்களின் குடும்பத்தார்கள் விடயத்தில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*இவர்கள் நபி ﷺ அவர்களின் குடும்பத்தார் மீது இரண்டு விடயத்திற்காக பாசமாக இருக்கின்றனர். 1- அவர்கள் அனைவரும் அல்லாஹ்வை நம்பியவர்கள் (ஈமான்கொண்டவர்கள்). 2- அவர்கள் நபி ﷺ அவர்களுக்கு மிகவும் நெருக்கமானவர்கள். என்றாலும் அல்லாஹ்வை விட்டுவிட்டு இவர்களை வணங்கும் அளவிற்கு இவர்கள் விடயத்தில் எல்லை மீறிச் செயற்படவோ, அவர்கள் அனைவரும் பாவம் செய்வதிலிருந்தும் பரிசுத்தமானவர்கள் என்று நம்பவோ மாட்டார்கள்.*

۞۞۞۞

**கேள்வி 143: சேர்ந்து நடத்தல் (அல்வலா), விலகி நடத்தல் (அல்பரா) என்ற விடயத்தில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*சேர்ந்து நடத்தல், விலகி நடத்தல் ஆகிய இரண்டுமே இஸ்லாமிய நம்பிக்கை சார்ந்த அம்சங்களாகும். அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்ற வாசகமும் இதனையே வேண்டி நிற்கின்றது.*

*சேர்ந்து நடத்தல் என்பது, இறை நம்பிக்கையாளர்களோடு (முஃமின்களோடு) பாசமாக இருப்பதையும், அவர்களோடு ஒட்டி உறவாடுவதையும் குறிக்கின்றது.*

*விலகி நடத்தல் என்பது, இறை நிராகரிப்பாளர்களின் (காபிர்களின்) இறை நிராகரிப்பு (குப்ர்) எனும் விடயத்தை எதிர்த்தலையும், அதை விட்டும் விலகி இருத்தலையும், அவர்களுக்கென்றே இருக்கும் சிறப்பம்சங்களை தாமும் செய்து, அவர்களுக்கு ஒப்பாகுவதை விட்டும் தூரமாகி இருப்பதையும் குறிக்கின்றது. இறை நிராகரிப்பாளர்களை விட்டும் விலகியிருத்தல் என்பதற்கு, அவர்களுக்கு அநீதமிழைக்க வேண்டுமென்றோ, அவர்கள் மீது எல்லை மீறிச் செயற்பட வேண்டுமென்றோ, அவர்களோடு உறவாடுவதை துண்டித்திட வேண்டுமென்றோ பொருள் கொள்ளக் கூடாது.*

**கேள்வி 144: ஈஸா عليه السلام அவர்கள் விடயத்தில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*ஈஸா عليه السلام அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும், தூதருமாவார்கள். இவர் வணங்கப்பட முடியாத ஓர் அடிமை, பொய்ப்பிக்கப்பட முடியாத ஓர் தூதர், இவர் ஆதம் عليه السلام அவர்களின் பரம்பரையில் வந்த ஓர் மனிதர், தந்தையின்றி, தாயின் மூலமாக படைக்கப்பட்ட ஓர் படைப்பு என்பதே இவர்களின் நிலைப்பாடாகும்.*

**கேள்வி 145: உலகில் மீதமிருக்கும் மார்க்கங்களான யூத, கிறிஸ்தவர்களின் மதங்கள் பற்றி அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது? அதற்கான ஆதாரத்தையும் குறிப்பிடுக.**

*நிச்சயமாக இஸ்லாமிய மார்க்கம், இதற்கு முன்னர் இறக்கப்பட்ட அனைத்து மார்க்கங்களுக்கு மாற்றீடாக இருக்கின்றது. முஹம்மத் ﷺ அவர்களின் வருகைக்குப் பின் இஸ்லாம் மார்க்கத்தைத் தவிர வேறு எந்த மார்க்கமும் அல்லாஹ்வால் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. ஏனைய மார்க்கங்கள் அனைத்தும் போலியானவை என்பதே இது விடயத்தில் இவர்களின் நிலைப்பாடாகும்.*

**கேள்வி 146: இஸ்லாமிய மார்க்கமே உண்மையானது, மற்ற அனைத்தும் போலியானது என்பதற்கு அல்குர்ஆனிலிருந்து ஓர் ஆதாரத்தைக் குறிப்பிடுக.**

*அல்லாஹ் கூறுகிறான்,* ***"இஸ்லாம் அல்லாத மார்க்கத்தை யாரேனும் விரும்பினால் அவரிடமிருந்து அது ஏற்கப்படாது. அவர் மறுமையில் இழப்பை அடைந்தவராக இருப்பார்."*** *(அல்குர்ஆன் 03:85).*

**கேள்வி 147: முஹம்மத் ﷺ அவர்கள் கொண்டு வந்த இஸ்லாமிய மார்கத்தை அவசியம் நம்ப வேண்டுமென்பதற்கு ஸுன்னாவிலிருந்து ஓர் ஆதாரத்தைக் குறிப்பிடுக.**

*நபி ﷺ அவர்கள் கூறினார்கள், "முஹம்மதின் உயிர் யாருடைய கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! இந்த(இறுதி)ச் சமுதாயத்திலுள்ள யூதரோ கிறிஸ்தவரோ யாரேனும் ஒருவர் என்(மார்க்கத்தி)னைப் பற்றிக் கேள்விப்பட்ட பிறகும்கூட நான் கொண்டுவந்த (மார்க்கத்)தை நம்பிக்கை கொள்ளாமல் இறந்துவிட்டால், அவர் நரகவாசிகளில் ஒருவராகவே இருப்பார்." (ஆதாரம் :முஸ்லிம் 153)*

**கேள்வி 148: அல்குர்ஆன், ஸுன்னா பற்றிய அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது? ஆதாரத்துடன் குறிப்பிடுக.**

*அல்குர்ஆன், ஸுன்னாவிற்கு முற்றிலும் கட்டுப்பட்டிட வேண்டும். அதன் பக்கமே ஒதுங்கிட வேண்டும். பகுத்தறிவின் மூலமோ, தர்க்கவியல் மூலமோ அதற்கு முரணாகச் செயற்படக் கூடாது என்பதே இவர்களின் நிலைப்பாடாகும். அல்லாஹ் கூறுகிறான்,* ***"முஹம்மதே!) உம் இறைவன் மேல் ஆணையாக! அவர்கள் தமக்கிடையே ஏற்பட்ட சண்டையில் உம்மை நீதிபதியாக ஏற்று, பின்னர் நீர் வழங்கிய தீர்ப்பில் தமக்குள் அதிருப்தி கொள்ளாமல், முழுமையாகக் கட்டுப்படும் வரை அவர்கள் நம்பிக்கை கொள்ளமாட்டார்கள்."*** *(அல்குர்ஆன் 04:65).*

**கேள்வி 149: அல்லாஹ்வின் பாதையில் போரிடுதல் தொடர்பில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*அல்லாஹ்வின் பாதையில் போரிடுதல் என்பது இஸ்லாத்தின் தலையாய அம்சமாகும். அல்லாஹ்வின் வார்த்தை உயர்ந்ததாக இருப்பதற்காக வேண்டி இது கடமையாக்கப்பட்டுள்ளது. என்றாலும் இதற்கென சில நிபந்தனைகள் இருக்கின்றன. அவற்றில் வலிமையும், சக்தியுமே மிக முக்கியமானவைகளாகும். முஸ்லிம்களின் தலைவருக்குக் கட்டுபட்டு, ஒரே கொடியின் கீழால் அணி திரள வேண்டும் என்பதுவே இவர்களின் நிலைப்பாடாகும்.*

**கேள்வி 150: ஜிஹாத் என்ற பெயரைத் தாங்கிக் கொண்டு, பயங்கரவாத செயற்பாடுகளில் ஈடுபடும் கும்பல்கள் பற்றி, அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தினரின் நிலைப்பாடு யாது?**

*ஜிஹாத் என்ற பெயரில் இயங்கிக் கொண்டிருக்கும் பயங்கரவாத அமைப்புக்களை இவர்கள் வெறுக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் ஹவாரிஜ்களின் போக்கைக் கடைபிடிக்கின்றனர். இஸ்லாத்தை சீர்குழைக்கும் செயற்பாடுகளையே அவர்கள் செய்து வருகின்றனர். பாதுகாப்பாக இருக்க வேண்டியவர்களை பயமுறுத்துகின்றனர். அப்பாவிகளைக் கொல்கின்றனர். இஸ்லாமிய உலகில் பல தீங்குகளையும், அட்டகாசங்களையும் புரிகின்றனர்.*

**அல்லாஹ்வே போதுமானவன்.**

**எங்கள் தூதர் முஹம்மத் ﷺ அவர்களுக்கும், அவரின் குடும்பத்தார், தோழர்கள் அனைவருக்கும் அல்லாஹ்வின் சாந்தியும், சமாதானமும் உண்டாகட்டும்.**